# வைதிக தர்ம வர்த்தனீ



மலர் 12
இதழ் 3

விளம்பி ௵
மார்கழி ௴

ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

# தர்ம சாஸ்த்ரச் சுருக்கம்.

கிழவிடையல் ஸ்ரீ ஆர். முத்துசாமி அய்யர் 1917-ம் வருஷத்தில் இயற்றியதின் **நான்காம் பதிப்பு.**

ப்ராஹ்மணர்களின் கர்மானுஷ்டானங்களை விவரிக்கும் **வைத்யநாத தீக்ஷிதீயம்** என்ற தர்ம சாஸ்த்ரத்தின் ஆறு காண்டங்களையும் ஸங்க்ரஹமாய் தமிழில் வெளியிடப்பட்டது. நல்லகாகிதம். 290 பக்கங்கள். காலிகோ அட்டைபைண்டு. ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளின் ஸ்ரீமுகத்துடனும், படத்துடனும் கூடியது.

**விலை ரூ. 3—0—0,** ரிஜிஸ்டர் தபால் சிலவு ரூ. 1—0—0.

**கிடைக்குமிடம்: ஸ்ரீ கே. எம். நாகராஜ அய்யர்,**
கிழவிடையல், கருப்பூர்–குடவாசல் P. O. (தஞ்சைஜில்லா)

---



---

## சந்தாதாரர்களுக்கு ஓர் விக்ஞாபநம்.

* 12ம் ஆண்டு புஸ்தகத்தைத் தொடர்ந்து அனுப்புங்கள், சந்தாவை கூடிய சீக்கிரமனுப்பிவைக்கிறேன் என்று கடிதம் எழுதிய சந்தாதாரர்கள் சந்தாவை அனுப்பிவைக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

* விலாஸம் மாறினால் தயவுசெய்து பத்ரிகைசேருவதற்கு உடன் கடிதமெழுதுங்கள். அட்ரஸை விளக்கமாக கூப்பனில் எழுதுங்கள்.

* தவறுதலாக இரண்டு பத்ரிகைகள் வந்தால் தயை செய்து ஒன்றை திருப்பி விடுங்கள்.

* சந்தாவை அனுப்பும்போது சந்தா நம்பரைக் குறிப்பிடுங்கள்.

* வைதிக தர்மவர்த்தனீ புஸ்தக சந்தாவைத்தவிர இதர தனி ப்ரசுரங்களுக்கு: மாம்பலம் குருகுலம், 2, ஸ்டேஷன் ரோடு, மேல மாம்பலம், சென்னை-17. என்ற விலாசத்திற்கு எழுதி பெற்றுக்கொள்ள வேண்டுகின்றோம்.

**ஆசிரியர் & மானேஜர்,** வைதிக தர்மவர்த்தனீ.

## விளம்பிஸு மார்கழிமீ ஹேமந்தருது. தக்ஷிணாயனம்.

| தமி. | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ஶ்ரா. திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | செவ். | ஷஷ்ட. | 21-15 | சத. | 56-43 | மர. | ஷஷ்ட |
| 2 | 17 | புத | ஸப். | 24-50 | பூரட். | 60-0 | அ. | ஸப். |
| 3 | 18 | வியா. | அஷ்ட. | 30-3 | ,, | 2-25 | ஸி. | அஷ்ட |
| 4 | 19 | வெள். | நவ. | 36-25 | உத்தி. | 9-30 | ஸி. | நவ. |
| 5 | 20 | சனி. | தச. | 43-15 | ரேவ. | 17-15 | பி. ஸி. | தச. |
| 6 | டிசம்பர்மீ 21 | ஞா. | ஏகா. | 50-0 | அசு. | 25-7 | ஸி. பி. | ஏகா. |
| 7 | 22 | திங். | த்வா. | 56-3 | பர. | 32-30 | ஸி. ம. | த்வா. |
| 8 | 23 | செ. | த்ர. | 60-0 | க்ருத் | 39-00 | ஸி. அ. | த்ர. |
| 9 | 24 | புதன். | ,, | 1-00 | ரோ. | 44-20 | ஸி. | சஸி. |
| 10 | 25 | வியா. ○ | சதுர். | 4-42 | மிருக. | 48-27 | ம. | பௌ |
| 11 | 26 | வெள். | பௌ. | 7-8 | திரு. | 51-20 | ஸி. | ப்ர. |
| 12 | 27 | சனி. | ப்ர. | 8-20 | புன. | 53-8 | ஸி. | த்வி. |
| 13 | 28 | ஞா. | த்வி. | 8-23 | பூச. | 53-58 | ஸி. | த்ரி. |
| 14 | 29 | திங். | த்ரி. | 7-32 | ஆயி. | 54-0 | ஸி. ம. | சது. |
| 15 | 30 | செவ். | சது. | 5-50 | மக. | 53-15 | ஸி. | பஞ். |
| 16 | 31 | புத. | பஞ். | 3-25 | பூர. | 51-50 | அ. | ஷஷ்ட |
| 17 | 1 | வியா. | ஷஷ்ட. | 0-17 | உத். | 49-47 | ம. ஸி. | ஸப். |
| | | | ஸப். | 56-32 | | | | |
| 18 | 2 | வெள். | அஷ்ட. | 52-3 | ஹஸ். | 47-3 | அ. ஸி. | அஷ்ட |
| 19 | 3 | சனி | நவ. | 46-57 | ஸித். | 43-42 | ம. அ. | நவ. |
| 20 | 4 | ஞா. | தச. | 41-15 | சுவா. | 39-45 | ஸி. உ. | தச. |
| 21 | 5 | திங். | ஏகா. | 35-8 | விசா. | 35-23 | ம. ஸி. | ஏகா. |
| 22 | ஜனவரிமீ 1959 6 | செவ் | த்வா. | 28-45 | அனு. | 30-45 | ஸி. உ. | த்வா. |
| 23 | 7 | புதன் | த்ர. | 22-23 | கேட். | 26-8 | ஸி. | த். ச. |
| 24 | 8 | வியா. ● | சஸி. | 16-23 | மூலம். | 21-56 | ஸி. | அமா |
| 25 | 9 | வெள். | அமா. | 11-5 | பூரா. | 18-25 | பி. ஸி. | ப்ர. |
| 26 | 10 | சனி | ப்ர. | 6-50 | உத்தி. | 16-2 | ஸி. | த்வி. |
| 27 | 11 | ஞா. | த்வி. | 4-3 | ஸிர. | 15-8 | அ. ம. | த்ரி. |
| 28 | 12 | திங். | த்ரி. | 3-00 | அவி. | 15-58 | ஸி. | சது. |
| 29 | 13 | செவ். | சது. | 3-57 | சத. | 18-42 | ம. | பஞ். |

6௨ வைகுண்ட ஏகாதசி, 8௨ கிருத்திகை, 11௨ ஆருத்ராதரிசனம்.
21௨ ஏகா- 24௨ அமா, 8, 22௨ ப்ரதோஷம், 29௨ போகிப்பண்டிகை

**பரோபகாரம் புண்யம்! அபகாரம் பாபம்!**

வைதிக தர்ம வர்த்தனீ.



விளம்பி௵ மார்கழிமீ.
மலர் 12] [இதழ் 3.
தனிப்ரதி அணா 7.
வருஷசந்தா ரூ. 5.
கார்யாலயம் : கடவாசல்,
வடகால் P.O. (Via.) சீர்காழி
(தஞ்சை ஜில்லா.)

## பொருளடக்கம்.



### அர்த்தமறிந்து அநுஷ்டானம் செய்.

வட ஆர்க்காடு அடயபலம் என்ற ஊரிலே ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் என்றோர் மஹாநுபாவர் இருந்தார். அவரிடம் ஸகல ஶாஸ்த்ரங்களும் குடிகொண்டிருந்தன. க்ஞானமே உருவாக வந்தவர். ஒருநாள் சிவ பூஜை செய்து கொண்டிருக்கும் பொழுது, ஶிஷ்யர்கள் ஸ்ரீ ருத்ர பாராயணம் செய்து வந்தனர். அச்சமயம் [ஶ்வப்ய: ஶ்வபதிப்யஶ்ச வோநம:] என்ற இடம் வந்தது. ஸ்ரீ தீக்ஷிதர் ஶிவனே! நீ நாய்களாகவும் நாய்கள் தலைவனாகவும் இருக்கிறாயா ? என அந்த மந்த்ர அர்த்தத்தை மநதினால் நினைத்தார். "ஆம்! அதற்கென்ன ஸந்தேஹம் ? " என கூறுவதுபோல் திடீரென ஒரு நாய்க்குட்டிவந்ததுஅங்கு.

ஶிவலிங்கத்தின் மீது முன் கால்களை வைத்துக் கொண்டு பஶுவின் கொம்பிலிருந்து விழும் அபிஷேகப் பாலை, நாக்கால் நக்கிற்று. இதைக்கண்டு ஶிஷ்யர்கள் பரபரப்படைந்து ஆசார ஶீலரான ஆசார்யன் அகத்திலே, ஶிவபூஜை நடக்குமிடத்திலே, ஶிவலிங்கத்தின் மீது, நாய் வந்து காலையும் வைத்ததே என எழுந்து அதை ஓட்ட முயற்சித்தனர். கையால் ஜாடை காட்டி அதை தடுத்தார் ஆசார்யர். அடுத்த நிமிஷத்தில் நாய்க்குட்டி சந்த்ர சூடனாக கங்காதரனாக ஶூலபாணியாக உமா ஸமேதனாக மாறி காக்ஷி அளித்தது. ஶிஷ்யர்கள் கண்ணில் படாமல் போனவழி தெரியாமல் மறைந்தது நாய்க்குட்டி. என்ன ஆச்சர்யம்.

**மநம், மெய், மொழி மூன்றும் ஒற்று பூஜை செய்.**

**இன்று யாருக்கு என்ன உதவி செய்தாய்?**



# ப்ரும்ம யக்ஞம்.



[இது நித்யம் செய்யவேண்டிய வேதோக்த கர்மா. அபாரமான புண்யந் தரும். மாத்யான்ஹிகம், ச்ராத்தம், தர்ப்பணம் இவைகள் ஆனபின் செய்ய வேண்டும்.]

ஓம் சுக்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர் புஜம் |
ப்ரஸன்ன வதனம் த்யாயேத் ஸர்வ விக்னோப சாந்தயே ||

ஓம்பூ:......ஸுவரோம், மமோபாத்த ஸமஸ்த துரிதக்ஷயத்வாரா ஸ்ரீபரமேச்வர ப்ரீத்யர்த்தம் ப்ருமம யக்ஞேன யக்ஷ்யே. ப்ரும்ம யக்ஞம் கரிஷ்யே என்றும் கூறலாம்.

विद्युदसि विद्यमे पाप्मानमृतात् सत्यमुपैमि ।

வித்$^{3}$யுத$^{2}$ஸி வித்$^{3}$யமே பாப்மாந ம்ருதாத் ஸத்ய முபைமி.

முன்னும் பின்னுமாக இரு கர தலங்களையும் துடைக்க வேண்டும். மூன்று முறை ஆசமநம் செய்து இருமுறை வாயைத் துடைத்து ஒரு முறை கை அலம்பி இடது கை கால்களை ப்ரோக்ஷித்து தலை கண்கள் மூக்கு காது ஹ்ருதயம் இவைகளைத் தொட்டு இடது கால்மீது வலதுகாலை அமர்த்தி ஸங்கல்பம் செய்வதுபோல் கைகளை வைத்துக் கொண்டு கூறுக.

ओं भूः । तत्सवितुर्वरेण्यं । ओं भुवः । भर्गो देवस्य धीमहि । ओँसुवः । धियो योनः प्रचोदयात् । ओं भूः तत्सवितु...धीमहि । ओं भुवः धियो......दयात् । ओँसुवः तत्सवि.........दयात् । इषेत्वो र्जेत्वा वायवस्थो पायवस्थ देवोव स्सविता प्रार्पयतु श्रेष्ठतमाय कर्मणे । हरिः ओं । अग्नि मीळे पुरोहितं यज्ञस्य देव मृत्विजम् । होतारं रत्न धातमम् । हरिः ओं । अग्न आयाहि

वीतयेगृणानो हव्य दातये। निहोता सत्सि बर्हिषि। हरिः ओं शन्नो देवी रभिष्टय आपो भवन्तु पीतये । शं यो रभिस्रवन्तुनः । हरिः ओं ॥ ओं भूर्भुवस्सुवः ॥ *தலையை ஜலத்தால் சுத்தி* सत्यं तपः श्रद्धायां जुहोमि ॥ ओं नमो ब्रह्मणे नमो अस्त्वग्नये नमः पृथिव्यै नम ओषधीभ्यः ॥ नमो वाचे नमो वाचस्पतये नमो विष्णवे बृहते करोमि ॥ *மூன்று முறை இதைக் கூறி*

वृष्टिरसि वृश्चमे पाप्मान मृतात् सत्यमुपागाम् ।

முன்போல் இரு கர தலங்களையும் துடைக்கவேண்டும்.

ஓம் பூ$^{4}$: தத்ஸவிதுர் வரேண்யம் | ஓம் புவ: ப$^{4}$ர்கே$^{3}$ா தே$^{3}$வஸ்ய தீ$^{4}$மஹி ॥ ஓகு$^{3}$ம் ஸுவ: தி$^{4}$யோயோந: ப்ர சோத$^{3}$யாத் | ஓம் பூ$^{4}$: தத்........தீ$^{4}$மஹி ॥ ஓம் பு$^{4}$வ: தி$^{4}$யோ .......யாத் ॥ ஓகு$^{2}$ம் ஸுவ: தத்ஸவிது........சோத$^{3}$யாத் ॥

இஷேத்வோர் ஜேத்வா வாயவஸ்தே$^{2}$ா பாயவஸ்த$^{2}$ தே$^{3}$வோவஸ் ஸவிதா ப்ரார்ப்பயது ஶ்ரேஷ்ட$^{2}$ தமாய கர்மணே ॥ ஹரி: ஓம் ॥ அக்$^{3}$நி மீளே புரோஹிதம் யக்ஞ ஸ்ய தே$^{3}$வ ம்ருத்விஜம் | ஹோதாரம் ரத்ந த$^{4}$ாதமம் ॥ ஹரி: ஓம் ॥ அக்ந ஆயாஹி வீதயே க்$^{3}$ருணோ ஹவ்ய த$^{2}$ாதயே | நிஹோதா ஸத்ஸி பர்ஹிஷி ॥ ஹரி: ஓம் ॥ ஶன்னோ தே$^{3}$வீ ரபி$^{4}$ஷ்டய ஆபோ ப$^{4}$வந்து பீதயே ॥ ஶம்யோ ரபி$^{4}$ ஸ்ரவந்து ந: ॥ ஹரி: ஓம் ॥

ஓம் பூ$^{4}$ர் பு$^{4}$வ ஸ்ஸுவ: | தலையை ஜலத்தால் சுற்றி ஸத்யம் தப: ஶ்ரத்தாயாம் ஜுஹோமி | ஓம் நமோ ப்$^{3}$ரும் மணேநமோ அஸ்த்வக்$^{3}$நயே நம: ப்ருதி$^{2}$வ்யை நம ஓஷ தீ$^{4}$ப்$^{4}$ய: | நமோ வாசே நமோ வாசஸ்பதயே நமோ விஷ் ணவே ப்ருஹதேகரோமி ॥ 3 முறை இதைக் கூறி வ்ருஷ்டி ரஸி வ்ருஶ்சமே ப்பாப்மாந ம்ருதாத் ஸத்யமுபாக$^{3}$ாம் |

---

நம்மால் எவ்வகை இடஞ்சலும் இருக்கக்கூடாது.

[இதுவரை காலையில் செய்து வேத அத்யயநம் செய்தவர் ஒரு ப்ரச்நம் அல்லது முடிந்த அளவு வேதம் கூறலாம். மாத்யான்ஹிகம், ஶ்ராத்தம், தர்ப்பணம் இவை ஆனபின்பே தர்ப்பணம் செய்யவேண்டும்.]

## ப்ரும்ம யக்ஞ தர்ப்பணம்.

ஓம் ஶுக்லாம்............சாந்தயே. ஓம் பூ:............ஸுவரோம். மமோ............யர்த்தம் ப்ரம்ம யக்ஞ தர்ப்பணம் கரிஷ்யே. கை அலம்பி

ப்ரும்மாத³யோ யேதே³வா: தான் தே³வான் தர்ப்பயாமி | ஸர்வான் தே³வான் தர்ப்பயாமி | ஸர்வ தே³வ கணுன் தர்ப்பயாமி | ஸர்வ தே³வ பத்நீ: தர்ப்பயாமி | ஸர்வ தே³வ க³ண பத்நீ: தர்ப்பயாமி | நுனி விரலால் இந்த தர்ப்பணங்கள் ஒரு முறை செய்யவேண்டும். [நிவீதமாக மாலையாக பூணலை தரித்துக்கொண்டு கீழ் வரும் ரிஷிதர்ப்பணங்களை அஞ்ஜலியின் உட்கையால் சுண்டிவிரல் பக்கமாக இருமுறை செய்யவேண்டும்.]

க்ருஷ்ண த்³வைபாய நாதயோ யேரிஷய: தான்ரிஷீன் தர்ப்பயாமி | ஸர்வான் ரிஷீன் தர்ப்பயாமி | ஸர்வ ரிஷிகணுன் தர்ப்பயாமி ! ஸர்வ ரிஷிபத்நீ: தர்ப்பயாமி | ஸர்வ ரிஷிகண பத்நீ: தர்ப்பயாமி | ப்ரஜாபதிம் காண்ட³ரிஷிம் தர்ப்பயாமி | ஸோமம் காண்டரிஷிம் தர்ப்பயாமி || அக்நிம் காண்டரிஷிம் தர்ப்பயாமி | விஶ்வான் தே³வான் காண்டரிஷீகு³ம்ஸ் தர்ப்பயாமி | ஸாகு³ம்ஹிதீ: தே³வதா உபநிஷத³ஸ் தர்ப்பயாமி | யாக்ஞிகீர் தே³வதா உபநிஷத³ஸ் தர்ப்பயாமி | வாருணீர் தே³வதா உபநிஷத³: தர்ப்பயாமி | ஹவ்யவாஹம் தர்ப்பயாமி | விஶ்வான் தேவான் காண்டரிஷீகு³ம்ஸ் தர்ப்பயாமி |

[இதை அடிக்கையால் தர்ப்பணம் செய்யவேண்டும்.]

ப்ரும்மாணகு³ம் ஸ்வயம் பு³வம் தர்ப்பயாமி ||
விஶ்வான் தே³வான் காண்டரிஷீன் தர்ப்பயாமி |
அருணுன் காண்டரிஷீம்ஸ் தர்ப்பயாமி |

[நுனி விரலால் செய்க] ஸதஸம்பதிம் தர்ப்பயாமி | ரிக்³வேதம் தர்ப்பயாமி | யஜுர் வேதம் தர்ப்பயாமி |

---

**கை கால்களால் பிறரை இடிக்காமல் இரு.**

ஸாமவேதம் தர்ப்பயாமி । அதர்வ வேதம் தர்ப்பயாமி । இதிஹாஸ புராணம் தர்ப்பயாமி । கல்பம் தர்ப்பயாமி ॥

[கீழ் வருபவைகளை ப்ராசீநவீதனுகி கட்டைவிரல் புறமாக 3 முறை தர்ப்பணம் செய்க.]

**सोमः पितृमान् यमोंगिरस्वान् अग्निः कव्य वाहनः इत्यादयो ये पितरः तान्पितॄंस्तर्पयामि ।**

ஸோம: பித்ருமான் யமோங்கிரஸ்வான் அக்நி: கவ்ய வாஹந: இத்யாத³யோ யே பிதர: தான் பித்ரூகும்ஸ் தர்ப்பயாமி । ஸர்வான் பித்ரூன் தர்ப்பயாமி । ஸர்வ பித்ரு கணான் தர்ப்பயாமி । ஸர்வ பித்ரு பத்நீ: தர்ப்பயாமி । ஸர்வ பித்ரு கணபத்நீ: தர்ப்பயாமி ॥

**ऊर्जं वहन्ती रमृतं घृतं पयः कीलालं परिस्रुतं ।**

**स्वधास्थ तर्पयतमे पितॄन् ।** த்ருப்யத த்ருப்யத த்ருப்யத

ஊர்ஜம் வஹந்தீ ரம்ருதம் க்⁴ருதம் பய: கீலாலம் பரிஸ்ருதம் । ஸ்வதாஸ்த² தர்ப்பயதமே பித்ரூன் । த்ருப்யத த்ருப்யத த்ருப்யத. யக்ஞோபவீதியாகி ஆசமநம் செய்து ப்ரும்மயக்ஞம் பூர்த்தியாகும்.

ப்ரும்மயக்ஞம் என்பது நித்ய கர்மாமாத்ரமல்ல. இது ஒரு பெருந் தவம் என வேதமே போற்றுகிறது. ஆபஸ்தம்பர் மிகச் சுருக்கமாக விதித்திருக்கிறார். இது இரண்டு பாகமாக உளது. பூர்வபாகம், வேதாத்யயநம் மற்றது தர்ப்பண ரூபம். தேவர் பித்ருக்கள் ஆகியவர்க்கு இது நெய் ஆறு, பால் ஆறு, தேன் ஆருக ஓடி பேராநந்தமளிக்கிறது. நமது பாபத்தை அகற்றுகிறது. தேவலோகமளிக்கிறது.

பொருள்: வித்யுத் என்ற தேவர் பாபங்களை அகற்றுவதற்காகப் படைக்கப்பட்டவர். ஓ தீர்த்தமே! நீ வித்யுத் தேவராக இருந்து எனது பாபத்தை அகற்றும். இந்த யக்ஞத்தால் நான் ப்ரும்ம ரூபத்தை அடைகிறேன். ஓ தீர்த்தமே! நீ விருஷ்டி என்ற தேவனுகி என் பாபத்தை அகற்றும். இதனுல் நான் ப்ரும்மத்தை அடைந்தேன். பிறகு காயத்ரியை பாதம் பாதமாகவும், பாதி ரிக்காகவும்

வ்யாஹ்ருதியுடன் கூறவேண்டும். நான்கு வேதங்களின் முதல் மந்த்ரம் கூறுப்படுகிறது. **ஸத்யம் :** வேதாத்யயந மெனும் தவத்தை ஶ்ரத்தையில் ஹோமம் செய்கிறேன். **நமோ ப்ரும்மணே** ப்ரும்ம, அக்நி, பூமி, ஓஷதி, வாக்கு, ப்ருஹஸ்பதி, மஹா புருஷனன விஷ்ணு இவர்களுக்கு நமஸ்காரம். ப்ரும்மாதி தேவர், வேதவ்யாஸர் முதலிய ரிஷிகள், காண்ட ரிஷிகள், வேத புராணம் முதலியவற் றிற்கும், ஸோமன் யமன் அக்நி முதலிய பித்ருக்களுக்கும் தர்ப்பணம் செய்யவேண்டும்.

**ஊர்ஜம் :** ஓ தீர்த்தமே ! நீ எங்கள் பித்ருக்கள் எந்த தேஹம் எடுத்திருக்கிறார்களோ அதற்கேற்றபடி தேவரா யின் அம்ருதமாகி, மனுஷ்யராயின் அன்னமாகி, மற்ற வர்களாயின் நெய் பால் ஜலமாகி நீச ஜன்மா பெற்றிருந் தால் ஸுரை ஆகி அவர்களுக்கு ஸந்தோஷமளி.

---

**குறிப்பு :** வேதாத்யயநம் ஆனவர்கள் முடிந்தவரை வேதத் தைக் கூறலாம். ருத்ர சமக உபநிஷத் முதலியவை மாத்ரம் கற்றவர், அவைகளை அல்லது அதில் ஒரு சிறு பாகத்தைக் கூற லாம். ஒன்றும் ஆகாதவர் நான்கு வேதங்களின் ஆரம்பமான அக்நி மீளே முதலியவைகளைக் கூறுவதே போதும்.

' அக்நிமீளே, இஷேத்வா, அக்ந ஆயாஹி, ஶந்நோ தேவீ ' என்ற 4 வேத ஆரம்பத்தை க்ரமப்படி கூறலாம். ஸ்வ வேதத்தை முன்னே கூறி பிறகு மற்றதைக் கூறுவதுமுண்டு.

ரிஷிதர்ப்பணத்தில் ' ஸாகும் ஹிதீர் ' என்பது போன்ற தேவ வேத தர்ப்பணங்களை உபவீதியாய் இருந்து தேவ தீர்த்தத்தால் செய்வது முறை. இப்போது அது அனுஷ்டானத்தில் சிலருக்கு இல்லை.

தந்தை ஜீவித்திருக்கும்போதும் ப்ராசீநாவீதியாக பித்ரு தர்ப்பணம் செய்யவேண்டும். சிலர் இதையும் அனுஷ்டிப்பதில்லை. **உபவீதி:** இடது தோள்மீது பூணல். **நிவீதி:** மாலைபோலிருப்பது. **ப்ராசீனாவீதி:** வலது தோளில் பூணல் தரிப்பது. **தேவதீர்த்தம்:** நுனி விரலால். **பித்ருதீர்த்தம்:** கட்டை விரல் ஆள்காட்டி விரல் களுக்கிடையால். **ப்ரும்ம தீர்த்தம்:** கை அடிபாகத்தால். **ரிஷி தீர்த்தம்:** சுண்டுவிரல் புறத்தால்.

---

# நூல் அறிமுகம்.

**ஸதாசாரம் :** மாம்பலம் குருகுல வெளியீடு. 78 பக்கம். 340 ஆசார விளக்கம். விலை 10 அணு, 12 ந. பைசா தபால் செலவு. குருகுலத்தில் கிடைக்கும்.] பெரியோர் அருகிலில்லாததால் ஸதாசாரம் இன்னதென தற்காலத்தவர் அறிய முடியவில்லை. ஆசாரமில்லாமல் செய்யும் கர்மா பூர்ண பயனைத் தராது. இதில் ஒவ்வொன்றிற்கும் உதாஹரணம், யுக்தி முதலியன கூறப்பட்டுள. முக்யமாக தேவ பூஜை, தர்ப்பணம் போன்றவைகளில் நமது கடமையை நினைவூட்டுகிறது. ப்ரத்யேகமாக பெண்களுக்குரிய ஆசாரமுமுளது. தர்மத்திற்கு ஜீவனிது.

2 **நமக்கு மதிப்புரை:** இண்டியன் எக்ஸ்ப்ரஸ், சுதேசமித்ரன், பாரத் க்ரஹ ஸஞ்சாரம் ஆகியவை நமது பத்ரிகை பற்றி விமர்சனம் எழுதியிருக்கின்றன. கோடி மங்கலம் ஸ்ரீ விச்வநாத சிவாசார்யார் மிக விரிவாக நமது விஷயங்களை ஆமோதித்து இதன் விருத்திக்காக பலரைச் சந்தாதாரராகச் சேர்த்திருக்கிறார். பூர்ணமாக எழுத முடியாமைக்கு வருந்துகிறோம். அனைவர்க்கும் நன்றி.

3 **ஸூதக ஆசௌச விளக்கம் :** குருகுல வெளியீடு. விலை தபால் சிலவுடன் 33 ந. பை.] முக்யமாக தீட்டில் ப்ராத்தம் முதலியவைகளை செய்யக்கூடாது. யார் யாருக்கு எத்தனை நாள் தீட்டு? 2 தீட்டு ஒன்று சேர்ந்தால் எப்படி? 3 நாள், $1\frac{1}{2}$ நாள், 1 நாள் யாருக்கு? முதலியன காணலாம். வீட்டிற்கு ஒரு நூலிருக்க வேண்டும்.

4 **வைகுண்ட ஏகாதசி** முதல் 25 ஏகாதசிகளின் பெருமை. குருகுல வெளியீடு 6 அணு விலை, 8 ந. பைசா புக்போஸ்டு பாத்ம புராணத்திலிருந்து எடுக்கப்பட்டது. ஒவ்வொன்றும் தனித்தனி பலனை அளிப்பது. பெயருள்ளது. அநுஷ்டிக்கும் முறை. ருசியான கதைகள். ஒவ்வொருவரும் படிக்கவேண்டிய நூல்.

**சாஸ்த்ரமே ப்ரமாணம்.**

ஸ்ரீ ஜகத்குருவிடம் சீமைசென்றுவந்த ஒருப்ராம்மணர் வந்து சீமையிலும் நான் அமாவாஸை தர்ப்பணம் விடாமல் செய்தேனென பெருமையுடன் கூறினர். தாங்கள் போனதோடல்லாமல் பித்ருக்களையும் அங்கு அழைத்தீர்களா! என்றார் ஜகத்குரு. சீமைக்குப்போவது சாஸ்த்ர விரோதம். அங்கு வைதிக கர்மா செய்வது அதைவிட அசாஸ்த்ரீயம் என்று பதில் அளித்து அதன் தோஷங்களையும் சொன்னார்கள்.

**முகத்தினருகே முகம் வைத்துப் பேசாதே.**

# தைத்திரீய உபநிஷத்.

இரண்டாம் ப்ரச்னம். (ஐப்பசியீ தொடர்ச்சி.)

**एत॑ँहवाव न तपति । किमह॑ँसाधुनाकरवं ।**

**किमहं पापमकरवमिति ॥**

**किं** - ஏன் **अहं** - நான் **साधु** - நற்கர்மாவை **नाकरवं** செய்யவில்லை. **अहं** - நான் **किं** - ஏன் **पापं** - பாபத்தை **अकरवं** - செய்தேன் **इति** – என்று (நினைவு) **एतं हवाव** — இவன் ஒருவனையே **न तपति** - கஷ்டப்படுத்துவதில்லை.

இறக்கும்பொழுது ஒவ்வொரு பிராணியையும் நான் ஏன் புண்ய கர்மாவைச் செய்யவில்லை? நான் ஏன் பாபம் செய்தேன்? என்ற எண்ணம் தபிக்கும்படிச் செய்யும். பிரும்ம ஸ்வரூபத்தை அறிந்தவன் ஒருவனையே இந்த எண்ணம் தபிக்கும்படி செய்வதில்லை.

**स यएवं विद्वा नेते आत्मान॑ँ स्पृणुते ।**

**यः** - எவன் **एते** - இவைகளை **एवं** - இம்மாதிரி **विद्वान्** அறிகிறனே **सः** - அவன் **आत्मानं** - ஆத்மாவை **स्पृणुते** - ஸந்தோஷப்படுத்துவான்.

எவன், புண்ய பாபகர்மாக்கள் தாபத்தை உண்டுப் பண்ணக்கூடியவை என்பதை ஶாஸ்த்ர ப்ரமாணத்தால் அறிகிறனே அவன் அந்த தாபம் தனக்குண்டாகாமலிருக்க ஆத்மாவை ஸந்தோஷப் படுத்துகிறன். அல்லது ஆத்மாவை பலமாகக் கொள்கிறன். ஆத்மா 'ஸாக்ஷி'. கர்த்தா அல்ல. புண்யபாபங்கள் அவருக்கில்லையென ஸந்தோஷமுள்ளவனக ஆகிறன்.

---

उभे ह्येवैष एते आत्मानं स्पृणुते । य एवं वेद । इत्युपनिषत् ॥

यः — எவன் एवं — இம்மாதிரி वेद — அறிகிறானோ एषःहि - இவன் उभे - புண்ய பாபங்களான एते - இவைகளை आत्मानं - ஆத்மாவாக स्पृणुते - பார்க்கிறான். इति - என்று उपनिषत् - ரஹஸ்ய வித்யை.

யார் புண்ய பாபங்களை அகற்றுவது ஆத்ம ஞானம் என்று அறிகிறானோ அவன் அந்த புண்ய பாபங்களையும் ஆத்மாவாகவே பார்க்கிறான், என்று ரஹஸ்யமான ப்ரும்ம வித்யை கூறப்பட்டது.

ஸஹநாவவது என்ற உத்தரஶாந்தி கூறவேண்டும். இதன் மூலமும் பொருளும் முதலில் கூறப்பட்டது. ஒன்பது அநுவாகத்துடன் ப்ரும்மவல்லீ என்ற இரண்டாம் ப்ரஶ்ந உபநிஷத் பூர்ணமானது.

---

## மூன்றும் ப்ரச்னம் - ப்ருகுவல்லி.

हरिः ओं

सहनाववतु । सह नौ भुनक्तु । सहवीर्यं करवावहै । तेजस्विनावधीतमस्तु माविद्विषावहै ॥ ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

குரு ஶிஷ்யரிருவரையும் (பகவான்) காப்பாற்றட்டும். இருவரையும் பரிபாலிக்கட்டும். இருவரும் வித்யையில் ஸாமர்த்யமுள்ளவர்களாக இருப்போம். நமது கல்வி தேஜஸ் உள்ளதாக இருக்கட்டும். ஒருவரை ஒருவர் த்வேஷிக்காமலிருப்போம். ஆத்யாத்மிக ஆதி தெய்விக ஆதி பௌதிக துன்பங்கள் இல்லாமலிருக்கட்டும்.

भृगुर्वै वारुणिः । वरुणं पितर मुपससार । अधीहि भगवो ब्रह्मेति ॥

वारुणिः - வருணபுத்ரரான भृगुः - ப்ருகு எனும் ரிஷியானவர் वै - ப்ரஸித்தமானவர். पितरं - தந்தையான वरुणं

---

வருணரை **उपससार** - குருவாக அடைந்தார். **भगवः** - பகவானே **ब्रह्म** - ப்ரும்மத்தை **अधीहि** - கற்பியும் **इति** - என்று

வருண புத்ரரான ப்ருகு மஹர்ஷி வேத புராணங்களில் மிக ப்ரஸித்தமானவர். அவர் தனது பிதாவான வருணரிடம் சென்று ஓ பகவன்! ஸத்குரோ! ப்ரம்ம ஸ்வரூபத்தை நன்கு ஸ்மரித்து எனக்கு உபதேசம் செய்யுங்கள் என அவரைக் குருவாக அடைந்தார்.

ப்ருகு அதைக்கேட்டு வருணன் உபதேசித்த பிறகு இந்த உபநிஷத்துத் தோன்றிற்று என நினைக்கலாகாது. குருவினிடம் சென்றே ப்ரும்மவித்யை கற்க வேண்டும் என்ற ஸம்ப்ரதாயத்தைக் காட்டவே ஶ்ருதி இந்த கதையைக் கூறுகிறது.

**तस्मा एतत्प्रोवाच । अन्नं प्राणं चक्षुः श्रोत्रं मनो वाचमिति ॥**

**तस्मै** - அந்த ப்ருகுவிற்கு **एतत्** - இந்த **अन्नं** - அன்னத்தாலான ஶரீரம் **प्राणं** - ப்ராண வாயு **चक्षुः** - கண் **श्रोत्रं** காது **मनः** - மனது **वाचं** - வாக்கு **इति** - என்பதை **प्रोवाच** -(ப்ரும்மமெனக்) கூறினார்.

ஐந்து கோஶங்களை முதலில் கூறி அதன்பிறகு ஆத்ம ஸ்வருபத்தை உபதேசிப்பதற்காக கோஶங்களுக்குக் காரணமாக உள்ள இவைகளை ப்ரும்மம் என உபதேசித்தார். ஆகாஶத்தில் ஸூக்ஷ்மமாக உள்ள சந்த்ரனைக்காட்ட முதலில் மரக்கிளையைக் காட்டுவதுபோலாமிது.

**तꣳहोवाच । यतो वा इमानि भूतानि जायन्ते । येन जातानि जीवन्ति । यत्प्रयन्त्यभिसंविशन्ति । तद्विजिज्ञासस्व । तद्ब्रह्मेति ॥**

**तं** - அந்த ப்ருகுவை நோக்கி **ह** - ப்ரஸித்தமானதை **उवाच** - சொன்னார். **यतः** - எந்த இடத்திலிருந்து **इमानि भूतानि** - இந்த ப்ராணிகள் **जायन्ते** - உண்டாகின்றனவோ

---

காற்றினால் அது பிறர்மீது படாமல் கவனி.

**वै** - ப்ரஸித்தமானது **जातानि** - உண்டான ப்ராணிகள் **येन** எவரால் **जीवन्ति** - ரக்ஷிக்கப்படுகின்றனவோ **प्रयन्ति** . நாஶமாகும் பொருள்கள் **यत्** - எதை **अभिसंविशन्ति** - பூர்ணமாக அடைந்து லயிக்கின்றனவோ **तत्** -அதை **विजिज्ञासस्व** அறி. **तत्** - அது **ब्रह्म** - ப்ரும்ம **इति** - என்று பிருகுவை நாடி வருணன் கூறினர். எதனிடமிருந்து நாம் காணும் ஸமஸ்த பூதங்களும் உண்டாயினவோ எதனல் ரக்ஷிக்கப்படுகின்றனவோ எதனிடம் முடிவில் லயமாகின்றனவோ அதை பிரும்மமென்று அறி.

**सतपो तप्यत । सतप स्तप्त्वा ।**

**सः** அந்த ப்ருகு **तपः** ஸ்வதர்மத்தை **तप्यत** - நன்ருக செய்தார். **सः** அவர். **तपस्तप्त्वा** தபஸ்செய்து

ப்ருகு மஹர்ஷி அதைக் கேட்டுத் தனது கிருஹஸ் தாஶ்ரம தர்மத்தை நன்கு செய்து மநதை ஏகாக்ரப் படுத்தினர் அப்படித் தவம் செய்து விட்டு.

**முதல் அநுவாகம் முற்றிற்று.**

## 18 புராண ப்ரவசனம்.

சீவ் ஜட்ஜ் ஸ்ரீ தாமோதரராவ் முன்னிலையில் சென்னை கிருஷ்ணபுரத்தில் 14—11—58 முதல் நமது ஆசிரியரால் ஷை உபன்யாஸமும், கலாக்ஷேத்திரத்தில் ஸ்ரீ பாகவதமும் நடக்கின்றது.

**உஜ்ஜயினியில் காளிதாஸன் தினம்,** ராஷ்டரபதி, கைலாச நாத கட்ஜு, ஸ்ரீ பதஞ்சலி சாஸ்திரி, சைனு பிரவஸர் முதலிய பலர்கூட ஒரு வாரம் கொண்டாடப்பட்டது.

**காஞ்சி சுக்ல யஜுர் வேத பாடசாலையில்** 21—11—58 முதல் யாக்ஞ்ய வால்க்ய மஹோத்ஸவம் சிறப்பாக நடந்தது.

**ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதி** 18–11–58 அன்று பழைய மாம்பலம் ஸ்ரீசங்கர மடத்திற்கு விஜயம்,

---

**புகையோ பொடியோ எப்பொழுதுமே கூடாது.**

# ஸ்ரீ சங்கர உபதேச ரத்னம்.

**விவேக சூடாமணி.** (*கார்த்திகைமீ தொடர்ச்சி.*)

சென்றதை நினையாமை, வருவதை நினையாமை, கிடைத்ததில் உதாஸீநம், குணதோஷாதிகளை ஸமமாகக் கருதுவது, இஷ்டமானதிலும் அநிஷ்டமானதிலும் ஸமதை, ஸதாநந்தத்தால் வேறொன்றையும் அறியாமை, தேஹ இந்த்ரியாதிகளில் நான் எனது என்றஎண்ண மில்லாமை, பரமாத்ம ஜீவர்களுக்குள் பேதமில்லாமை ஆகியவை ஜீவன் முக்த லக்ஷணம்.

ஸாதுக்கள் பூஜித்தாலும் துஷ்டர் ஹிம்ஸித்தாலும் ஸமமாக இருத்தல், கடலில் நதிகள் விழுவதுபோல் விஷயங்கள் லயமாவது ஜீவன் முக்தனின் லக்ஷணமாம்.

தத்வமறிந்தவனுக்கு முன்போல் ஸம்ஸாரமில்லை. இருந்தால் அவன் தத்வமறிந்தவனல்ல. அநுபவ அறிவே அறிவாகும். முன் வாஸனையால் முக்தன் ஸம்ஸாரத்தி லீடுபடுகிறான் எனில் க்ஞாநம் வந்தவுடன் வாஸனை அழிந்துவிடுமே. மிக்க காமுகனாக இருந்தாலும் தன் தாயினிடம் காமனை தோன்றாது, க்ஞானிக்கு ஸம்ஸார ஆசை இராது.

நிதித்யாஸந காலத்தில் சிலருக்கு வெளிவஸ்துக் களுடன் ஸம்மந்தமிருக்கும். அதுதான் ப்ராரப்த அநுபவம். ஸ்வப்நத்தில் செய்யும் புண்ய பாபங்களுக்கு ஸ்வர்க்க நரகமில்லை. ஆத்மக்ஞாநம் வந்தபின் ஸகல கர்மாக்களும் அழிந்துபோம்.

பானையில் கள்ளிருந்தால் அந்த வாஸனைஸம்பந்தத்தால் ஆகாசம் அசுத்தமாவதில்லை. ஆத்மோபாதி யோகத்தால் சுத்த ப்ரும்ம ஸ்வரூபத்திற்கு தோஷமில்லை.

க்ஞாநம் வருவதற்குமுன் உடலால் ஆரம்பித்த கர்மா ப்ராரப்த கர்மாவாம். அது பலனைக் கொடாமல் போகாது. ஒரு பாணத்தை விட்டால் அது வேகமுள்ள வரை போய்தான் விழும்.

---

**நாலு பேர் எதிரில் கூடிவே கூடாது.**

புலி என்று எண்ணி பசுமீது பாணத்தை ஒருவன் விட்டான். உடனே அது பசு என்று தெரிந்தது. அந்த பாணத்தை ''அதை அடிக்காதே'' என்ருல் நிற்குமா?

ப்ராரப்த கர்மா பலமானது. அநுபவித்தால் தான் அது போகும். க்ஞாநத்தால் ஸஞ்சிதமும் ஆகாமியும் அகலும். ஸதா பிரும்மாத்ம ஐக்ய ஸ்வரூபனுக இருந்தால் பிராரப்தமும் அவனிடம் பயன் தராது,

ஸதா பிரும்ம நிஷ்டையிலுள்ளவனுக்கு ப்ராரப்தத்தால் உண்டாகும் பயன், தூங்கி எழுந்தவனுக்கு ஸ்வப்நத்தில் கண்டவிஷயம் போலாகும்.

கர்மாவால் உண்டாகும் உடலுக்கு ப்ராரப்த கர்ம பலன் கல்பிக்கலாம். அஜோ நித்ய என்று கூறப்படும் ஆத்மா கர்மாவால் வந்தவனல்ல. அவனுக்கு பிராரப்த கர்மா இல்லே.

க்ஞானத்தால் அக்ஞானமும் அதனுல் உண்டாகும் ஸகல கார்யங்களும் அழியும். ஆனுல் உடல் மாத்ரம் இருக்கிறதேயெனில் லோக திருஷ்டியை உத்தேசித்து அதனுல் தான் ப்ராரப்த கர்மா மாத்ரம் அழிவதில்லே என ஶ்ருதி கூறிற்று.

பரிபூர்ணனுக ஆநந்தகநாக ஆத்மா ஒருவர்தான் இருக்கிருர். பல என்பது கிடையாது. [நேஹநாநாஸ்தி கிஞ்சந] ஆசை முதலியவைகளே விட்ட உத்தம அதிகாரி பந்தத்திலிருந்து விடுபடுவது முக்தி பெறுவது ஆத்ம ஸ்வரூபியாக இருப்பது முதலியவைகளுக்கு ஶ்ருதி யுக்தி குரு வாக்யம் இவை ப்ரமாணம். தனது அநுபவமே சிறந்த ப்ரமாணம். மற்றவர் அநுமாநத்தால் தான் அறிவர். நமது பசி நமக்குத்தானே ப்ரத்யக்ஷம்.

ஜீவனும் ஸகல உலகும் பிரும்மமே என்ற தியாநத்தில் சிறிது நேரம் அமர்ந்தபின், புத்தி பிரவிருத்தி இதை அறிவேன் இதை அறியேன் இது என்ன? இது எவ்வளவு சுகம் என்பதுபோன்ற எண்ணமெல்லாம் மறைந்து போகும்.

---

# பால பாரதம்.

## விராட பர்வா.

கே: விராட பர்வா என்று ஏன் பெயர் வந்தது?

ப: பாண்டவர் விராடநகரத்தில் அக்ஞாதவாஸம் செய்ததால் அந்தப் பெயர் உண்டானது.

கே: அக்ஞாதவாஸம் எனில் ஒருவரும் அறியாமல் வஸிப்பது என்றல்லவா பொருள்? அங்ஙனம் எப்படி வஸித்தனர்?

ப: உடன் வந்தவர்களை எல்லாம் அனுப்பிவிட்டு தேவியை ஸ்தோத்ரம் செய்தார்கள். தேவியும் தர்ம தேவதை கூறியபடி நீங்களே உங்கள் பெயரைக் கூறினாலும் எவரும் உங்களை அறியமாட்டார் என அருள் புரிந்தாள்.

கே: அவர்களது கதை காண்டீபம் முதலிய ஆயுதங்களே, இவர் பாண்டவர் எனக்காட்டுமே? அவைகளை என்ன செய்தார்கள்?

ப: ஒரு சுடுகாட்டினருகிலுள்ள வன்னிமரத்தில் பதுக்கி வைத்து விட்டுச் சென்றனர்?

கே: தர்மர் தன் உருவை எப்படி மறைத்தார்?

ப: கங்கர் என்ற பெயருடன் ஸன்யாஸி உருவெடுத்து தர்மர் ஸபையில் ஸபாஸ்தாரன் என்ற வேலையிலிருந்ததாகவும் ஓராண்டு இங்கு தங்குவதாகவும் கூறினர்.

கே: ஸபாஸ்தாரன் என்பவரின் வேலையென்ன?

ப: அரசனுடன் ஸபையில் அமர்ந்து நற்கதைகளைக் கூறி அரசன் தோழன் போலிருந்து பொழுதைப் போக்குவதாம்.

---

தெரு ஓரத்தில் துப்பு. வழியில் துப்பாதே.

கே : பீமன் அவன் உடலை எப்படி மறைத்து என்ன வேலை செய்தான்?

ப : வலவன் என்ற சமயல்காரனுக வேஷந்தரித்து சமயல் வேலையில் அமர்ந்தான்.

கே : அந்த இடந்தான் அவனுக்கேற்ற சரியான இடம்! அர்ஜுநன்?

ப : ஸ்வர்க்கத்தில் ஊர்வஶி பேடியாகும்படி ஶாபம்தர இந்த்ரன் அதை ஸமயத்தில் ஓராண்டு அநுபவிக்கட்டுமென்று கூறினரல்லவா? பிருஹன்நளா என்ற பேடிரூபத்துடன் விராட்புத்ரியான உத்தரைக்கு ஸங்கீதம் நாட்யம் முதலியவைகளைக் கற்பித்துவந்தாள்.

கே : நகுலன் எப்படி மறைந்து எதனுல் ஜீவித்தான்?

ப : தர்மராஜனது குதிரைகளை ரக்ஷித்த தாமக்ரந்தி என்பவன் நான். அஶ்வ ஶாஸ்திரத்தில் அறிவு வாய்ந்தவன் என்று கூறி அஶ்வ ஶாலைக்கு அதிபனுனன்.

கே : வேஷமும் தர்மரிடம் இருந்தேன் என்பதும் மிகப்பொருத்தமானது. நம்பத்தக்கதுமாம். ஸஹதேவன்?

ப : தந்த்ரிபாலன் என்ற யாதவனுய் விராடனது கோக்களை ரக்ஷித்து வந்தான்.

கே : புருஷர்கள் எப்படியோ வேஷம் தரித்து வேலையிலமர்ந்தனர். ராணியாயிருந்தவள்! அக்நியிலிருந்து உதித்தவள்! மஹாபதிவ்ரதை! திரௌபதி எப்படி வஸித்தாள்?

ப : ஸைரந்த்ரி என்ற திரௌபதியின் வேலைக்காரி, புஷ்பம் தொடுப்பது தலைவாருவது சந்தநம் அறைப்பது போன்ற வேலைகள் தெரியுமென விராடன் மனைவி ஸுதேக்ஷ்ணையிடம் வேலைக்கு அமர்ந்தாள்.

---

# சாந்தி விலாஸம்.

(ஸ்ரீ கணபதி தீக்ஷிதர்.)

9. छाया तोयं वसनमशनं वाहनं दीपिका वा
क्रेतुं यस्मिन्किल न सुलभं किञ्चिदप्येषु मर्त्यैः।
तस्मिन्दूरे पथि तनुभृतां सर्वथैवाभिगम्ये
प्रस्थानार्हं कमपि तु विधिं घस्मरा न स्मरामः॥

சா[2]யா தோயம் வஸனமஶனம் வாஹனம் தீ[3]பிகாவா
க்ரேதும் யஸ்மின்கில நஸுலப[4]ம் கிஞ்சிதப்யேஷு மர்த்யை:
தஸ்மின் தூ[2]ரே பதி[2] தனுப்[4]ருதாம் ஸர்வதை[2]வாபி[3]க[3]ம்யே
ப்ரஸ்தா[2]னார்ஹம் கமபிதுவிதி[4]ம் க[4]ஸ்மரா ந ஸ்மராம: ॥

எந்த மார்க்கத்தில் நிழல், நீர், படுக்கை, உணவு, வாஹனம், தீபம் முதலியவை நாம் விலை கொடுத்தாலும் கிடைக்காதோ அப்படிப்பட்ட தூரமான வழியில் அவசியம் போகவேண்டியிருப்பதால் தர்மத்தை நன்கு செய்யவேண்டும். வயிற்றைப் பெரிதாக நினைக்கும் நாம் அதை நினைப்பதுகூட இல்லையே.

10. आकर्ण्यन्ते तपन तनय ग्राम सल्लापघोषाः
मन्दं मन्दं ग्रसति निहितः कालपाशोऽपि कण्ठे।
आपृच्छन्ते कृतजिगमिषा सम्भ्रमाः प्राणवाताः
नैवेदानीमपि विषय वैमुख्य मभ्येति चेतः॥

ஆகர்ண்யந்தே தபனதநய க்ரா[2]ம ஸல்லாப கோ[3]ஷா:
மந்த[4]ம் மந்த[3]ம்க்[3]ரஸதி நிஹித: காலபாஶோ ऽபிகண்டே
ஆப்ருச்ச[2]ந்தே க்ருதஜிக[3]மிஷா ஸம்ப்[3]ரமா: ப்ராணவாதா:
நைவேத[3]ா நீமபிவிஷய வைமுக்[2]ய மப்[3]யேதி சேத: ॥

சூரியன் புத்ரனான யமனுடைய ஊரில் பேசும் சப்தங்கள் செவியில் விழுகின்றன. கழுத்தில் யமனுடைய பாஶமும் மெள்ள மெள்ள விழுகின்றது. ப்ராணனும் உத்திரவு வாங்கிக்கொள்ளுகிறது. அப்பொழுதுகூட மனம் விஷயங்களிலிருந்து ஒழிவை அடையவில்லையே.

---

வாழைப்பழத்தோல் வழுக்கிவிழக் காரணமாகும்.

11. चक्षुष्यन्धे चलति दशने श्मश्रुणि श्वेतमाने
सीदत्यंगे मनसि कलुषे कंपमाने कराग्रे ।
दूतै रेतैः दिनकर भुवः शश्व दुदूबोध्य मानाः
त्रातुं देहं तदपि भिषजा मेव सान्त्वं वदामः ॥

சக்ஷுஷ் யந்தே⁴ சலதித³ஶநே ஶ்மஶ்ருணி ஶ்வேதமாநே
ஸீத³த்யங்கே³ மநஸிகலுஷே கம்பமாநே கராக்³ரே ।
தூ³தைரேதை: தி³நகரபு⁴வ: ஶஶ்வத் உத்³பு³த்⁴யமாநா:
த்ராதும் தே³ஹம் தத³பி பி⁴ஷஜா மேவ ஸாந்த்வம் வத³ாம: ॥

யமதூதர் மரணம் விரைவில் வரும் என எண்பிக்கிறார்கள். அதனால் கண் குருடாகும். பல் ஆடும். தாடி மீசை நரைக்கும். அங்கம் தளரும். மநம் கலங்கும். விரல்கள் ஆடும். இத்தகைய உடலைக் காக்க வைத்யரை வேண்டுகிறோம்! வைத்யநாதனை நினைப்பதில்லையே!

12. शान्तो वन्हिः जठरपिठरे संस्थिता कामवार्ता
धावं धावं दिशि दिशि शनैः इन्द्रियाश्वा निपेतुः ।
एवं दैवा दुपरम मगा देषमे वैरि वर्गः
चेतत्स्वेकं नवश मयते किंकरोमि क्व यामि ॥

ஶாந்தோ வந்ஹி: ஜடரபிடரே ஸம்ஸ்திதா காமவார்தா
த⁴ாவம் த⁴ாவம் தி³ஶிதிஶிஶநை: இந்த்³ரியாஶ்வா நிபேது:
ஏவம் தை³வாத் உபரம மக³ாத் ஏஷமே வைரிவர்க³:
சேதத்ஸ் வேகம் நவஶம் அயதே கிம்கரோமி க்வயாமி.

வயிற்றிலுள்ள ஜீர்ணாக்னி மந்தமாகிவிட்டது. காமம் என்ற பேச்சே ஒழிந்தது. ஐம்புலன் எனும் குதிரைகள் திக்கு திக்காக ஓடி மெதுவாக விழுந்துவிட்டன. தெய்வச் செயலாக எனது ஶத்ரு வர்க்கமெல்லாம் ஒழிந்தது. மநம் ஒன்றுதான் வஶமாக வில்லை. என்செய்வேன்? எங்கு செல்வேன்?

---

# ஸ்த்ரீ தர்மம்.

## சந்த்ரகாந்தா வித்யாவளீ ஸம்வாதம்.

### ஆக்நேய துலாபுராணம் 4வது அத்யாயம்.

[மதுரா நகரில் வேதசர்மா என்ற வேதியர் மனைவி சந்த்ரகாந்தா. அதே ஊரிலிருந்த வித்யாவளீ பதியைக்கொன்ற ப்ரஷ்டை. இவளது ஸஹவாஸத்தால் சந்த்ரகாந்தையும் கெட்டாள். காவேரி மஹிமையைக்கேட்டு நற்கதிப் பெற்றாள்.]

**வித்யாவளீ:** சந்த்ரகாந்தே! நீ என் கண்ணல்லவா? ஒரு ரஹஸ்யம் உன்னைக் கேட்க வந்தேன்.

**சந்த்ரகாந்தா:** அக்கா வாங்கோ! உட்காருங்கோ! என்ன ரஹஸ்யம் கேளுங்கோளேன்.

**வித்:** ஒன்றுமில்லை! இங்கே யாருமில்லையே! உன் புருஷன் உனக்கு வசமாக இருக்கிறானா, இல்லையா?

**சந்:** அம்மா நீ கேட்பது எனக்கு ஒன்றும் புரிய வில்லையே! வசமாக இருக்கிறதென்றால் என்ன?

**வித்:** அடி அசடே! இது தெரியவில்லையா? பூக்கர காலத்திலே பூக்கணம். காய்க்கிற காலத்திலே காய்க்கணம். இந்த வயசிலே நன்றாக ஆடை ஆபரணம் பூட்டி, பூச்சூட்டி இன்பம் அனுபவிக்க வேண்டாமா?

**சந்:** ஏதோ சுமாரா எல்லாந்தான் நடக்கிறது. இதுதானவசம்.

**வித்:** அதில்லேடீ! முக்யமா நான் கேட்பது வேறு. புருஷன் எப்போ பார்த்தாலும் பூஜை! விரதம்! உபவாஸம் என்கிறாரே! வயதானால் அந்த இன்பமெல்லாம் உனக்கு அனுபவிக்க முடியுமா? யௌவநம் சஞ்சலமல்லவா?

**சந்:** எதையோ நீ மநதிலே வைத்துக்கொண்டு பேசுகிறாய். நான் உள்ளதை மறைக்காமல் பேசுகிறேன். இதெல்லாம் பிறர் பேசக் கூடியதல்ல. ரிதுவாகி ஸ்நாநம் செய்த ஐந்தாவது நாளிலிருந்து 16 நாள் வரை தம்பதிகளுக்கு ஏற்றகாலம். இந்நாட்களிலும் அமாவாஸை, பூர்ணிமா, ஏகாதசி, த்வாதசி ஶ்ராத்தம் முன்பின் 3 நாள் ஆகிய இந்நாட்கள் ஏற்றதல்ல.

---

**வித் :** இதற்காகத்தான் நான் கேட்டது. வெகு அழகு! இப்படி நாள் பார்த்தால் என்றைக்குத்தான் இன்பம் அடைவது. இஷ்டமான போதல்லவா காலம்.

**சங் :** அம்மா விசித்ரமாகப் பேசுகிறாயே! நல்ல நாளில் உண்டாகும் குழந்தை கூனு குருடு செவிடு நொண்டி மொடமில்லாமலும் நோயில்லாமலும் அற்பாயுஸ்ஸாக மாளாமலும் இருக்கும். நிஷித்த நாட்களில் உண்டாவது, ஆயிரம் நோயுடனும் பெற்றோருக்கடங்காமலும் துஷ்டையாகவும் இருக்கும். நான் செய்வதை நல்லவாள் செய்யமாட்டாள்.

**வித் :** பிறக்கப்போகும் குழந்தையைப் பற்றி பேசுகிறாயே! முன்னே பிறந்த உன்னைப் பற்றி கவனிச்சயா? தாம்பத்யமில்லாவிட்டால் உடல் என்ன கதி யாகும் தெரியுமா? உடம்பு தளர்ந்தபின் அந்த ஆசையே உண்டாகாது.

**சங் :** வேண்டாமே! அவாளுக்கு இஷ்டமிருந்தபோது பெறும் ஸுகம் போருமே.

**வித் :** அடி! நீ மகா அசடு! உன் ஆம்படையான் யோக்கியனோ?

**சங் :** இதோபார்! யோக்யனோ அயோக்கியனோ? பதிதான் ஸதிக்கு தெய்வம். கற்பினால்தான் ஸ்வர்க்கம் கிடைக்கும் என்பார்கள். மற்றதெல்லாம் என்னிடம் பேசாதேபோய்வா.

**வித் :** அதென்னடி அப்படி கோச்சுக்கிறே நீ. மூட்டையை அவிழ்த்துக் காட்டட்டுமா. ரொம்ப யோக்யன்னு நினைச்சுண்டு இருக்கயே, என் தோழி தாஸியைக் கேட்டான்னா தெரியும் அவர் அள்ளல் எல்லாம்.

**சங் :** வாஸ்தவமா அவர் அங்கே போகிறாரா ?

**வித் :** நான் என்ன பொய்யா சொல்றேன். உன்னை விருதம் ஏகாதசின்னு ஏச்சுவிட்டு சதா அங்குதான் சரணம் தெரியுமா ?

**சங் :** அதென்னமோ அம்மா! புருஷாள் சமாசாரம். அவர் கெட்டால் அவர் குலம் கெடாதாம். கர்மா காயத்ரீ ஜபங்களால் அவர்பாபங்களெல்லாம் போயிடுமாமே.

**வித் :** குலமாவது ? கோத்ரமாவது ? புண்யமாவது பாபமாவது ? எல்லாம் எனக்குத் தெரியும். ஸ்வர்க்கம் ஸ்வர்க்கம் என்கிறார்களே. அங்கு ஊர்வசி திலோத்தமை யாரு அங்கே என்ன நடக்கிறது தெரியுமா ? எல்லாம் கதை.

---

இப்படிப் பலநாள் பலமுறை பல அதர்மங்களைக் கூறி அவள் மனதைக் கலைத்தாள் வித்யாவளி ஸாமர்த்யமாக. சந்த்ர காந்தை மனது இளகிற்று. ஏமார்ந்தாள். கற்பை மறந்தாள். ஸ்வல்ப சுகத்திற்கு ஆசைப்பட்டாள். சாச்வத தர்மத்தையும் கணவனையும் கைவிட்டாள். இவளது கெட்ட நடத்தையைக் கண்ட அரசன் இவளை நாட்டை விட்டு விரட்டினான். மகா ரோகமுண்டாகி இறந்தாள். ஒருமன்வந்த்ர காலம் வரை நரகத்தை அனுபவித்தாள். மறு பிறவியில் அங்கமெல்லாம் அழுகிச் சொட்டும் குஷ்டரோகத்துடன் தாஸியாகப் பிறந்தாள். முற்பிறவியில் செய்த பதி சிச்ருஷை புண்யத்தால் துலாமாஸம் காவேரியில் மூழ்கி புராணத்தைக் கேட்டவுடனிறந்தாள். திவ்ய விமானத்திலேறி ஸ்வர்க்கம்சென்றாள்.

**சேரிடமறிந்து சேர்! கெட்டவருடன் சேராதே.**

**வித்யாவளியை** யமனது நாய் கடித்து இழுத்துச் சென்றது. ப்ரளயம் வரை பல கோர நரகங்களை அனுபவித்தாள். 20 பிறவி புழுத்த நாயாகவும் 3 பிறவி பன்றியாகவும் பிறந்தாள். அடுத்த படி அம்பா என்ற காஶிராஜன் பெண்ணாகி பீஷ்மருக்கும் பரசுராமருக்கும் சண்டை மூட்டினாள். அடுத்த பிறவியில் சிகண்டி என்ற பேடியாகப் பிறந்தாள்.

---

## தார்மிகச் செய்தி.

**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு** வீணை ஸாம்பசிவய்யர், பிடில் வெங்கிட சாமிநாயுடு முதலிய ஸங்கீத வித்வான்களுக்கு ஸாதரா அளித்து ஸம்மானித்தார்கள். தீபாவளியன்று ஜனரல் ஆஸ்பத்திரியில் உள்ளோர்க்கு கங்காஜலம், எண்ணெய் பக்ஷயம்முதலியனவழங்கினார்கள்

**வித்யாபவந கிளை.** பாம்பேயிலுள்ள இதன் கிளை ஒன்றை சாஸ்த்ர ரத்நாகரம் பிரும்மஸ்ரீ பக்ஷிதீர்த்தம் வெங்கடேச தீக்ஷிதருடன் ஸ்ரீ முன்ஷி சென்னையில் ஸ்தாபித்தார்.

**ஸ்ரீ சங்கராசார்யரும் மத்வாசார்யரும்:** ஸம்ஸ்கிருத காலேஜில் ஒரு மேடையிலமர்ந்து த்வைத அத்வைதங்கள் வேறாயினும் தர்மம் ஒன்று. ஒரு அஸுரன் ஒருவராலும் இருவராலும் மரணம் கூடாதென வரம் பெற - ஹரிஹரர் இருவரும் சங்கர நாராயணனாகி அவனைக் கொன்றார்கள். தர்மம் பற்றியவரை எல்லா மடாதிபதிகளும் ஒன்றுசேர வேண்டும். அங்ஙனமே வைஷ்ணவ மடமும் சைவமடமும் சேர்ந்து ஹிந்து மதப்ரசார ஸபை மூலமாக எண்ணிறந்த துண்டு பிரசுரங்களை வெளியிடும் என பேசினார்கள்.

---

**ஜநக்கூட்டத்தில் தேவதா ஸான்னித்யமுண்டு.**

# மார்கழிமீ கோசார பலன்

ஜோதிஷபானு, E. S. K. ஸ்வாமி,

பாரத் கிரஹ ஸஞ்சார ஆசிரியர்.

## மேஷ ராசி.

### அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய.

சனி பாக்கியத்திலும், குரு சப்தமத்திலும் இருக்கிறுர். இதனுல் பழைய நடப்புகளில் சில சீர்திருத்தம் ஏற்பட்டுவரும். நிர்வாகத்தில் சௌகரிய நிலமை உண்டாகும். சிலருக்கு பூமி, சொத்து விஷயமாய் அனுகூலம் உண்டாகும். உத்தியோகத்தில் நல்ல மாற்றமும், சிலருக்கு சிறிது வருமானம் கூடுவதும், சுபமுயற்சிகளும் ஏற்படுவதாகும்.

## ரிஷப ராசி.

### கிருத். 2ம் பாதம் முதல் ரோகிணி மிருகசீரிஷம் 2-ம் பாதம் முடிய.

தன நடப்பில் அன்னியர் சகாயத்தை எதிர்பார்க்கும்படியாகும். குடும்ப நடப்பில் 17வ வரையில் நிம்மதி குறைந்து காட்டும். செய்தொழிலில் திருப்தி குறைவான மார்க்கம் ஏற்படும். புதிய வகை முயற்சிகள் தாமதப்பட்டு கூடும். வியாபாரத்தில் கட்டுப்பாடுகள் அதிகமாகும். சம வருமானம் ஏற்பட்டு வரும். சுப முயற்சிகள் கூடிவரும்.

## மிதுன ராசி

### மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்வசு 3-ம் பாதம் முடிய.

செய்தொழிலில் சிறிது சிறிதாக விருத்தி ஏற்படும். தொழில் முன்னேறி ஆதாயம் உண்டாகும். செல்வாக்குள்ள நபர்களின் ஆதரவு ஏற்படும். களத்ர புத்ர சௌக்யம் உண்டாகும். சிலருக்கு வெளியூர் போய்வர நேரும். பந்து, சிநேகிதர் இவர்கள் சேர்க்கை உண்டாகும். வியாபாரத்தில் ஓரளவு நன்மை உண்டாகும். புண்ணிய விஷயங்களில் சிலவு செய்ய நேரும்.

## கடக ராசி.

### புனர்வசு 4-ம்பாதம் முதல் புஷ்யம், ஆயில்யம் முடிய.

உத்தியோகத்தில் சில புதிய மாறுபாடுகள் உண்டாகும். முன்னேற்றத் திற்குரிய அறிகுறிகள் ஏற்படும். ஆரோக்கிய வகையில் சிறிது சிலவு செய்ய நேரும். பந்துக்களால் சிறிது வருத்தம் ஏற்பட்டு அடங்கும். பிறர் காரியங் களில் தலையிடும்படியாகும். களத்ர புத்ர சௌக்யம் ஏற்பட்டுவரும். மேலோர் நேசம் உண்டாகும்.

## சிம்ம ராசி.

### மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய.

எந்த காரியமும் தடைப்பட்டு கூடிவரும். பந்துக்களிடமிருந்து கிலேசத் திற்குரிய சங்கதிகள் கேள்விப்படும்படியாகும். குடும்ப சிலவுகள் அதிகமாகும்.

---

**அங்கு கத்துவதும் சிரிப்பதும் கூடாது.**

குடும்பத்தில் சாமானியமாய் வைத்திய வகையில் சிலவுகள் உண்டாகும். உத்தியோகத்தில் அதிகாரி ஆதரவும், செய்காரியங்களில் சோர்வும், வர வேண்டியவை தடைப்பட்டு வருவதும் ஏற்படும். சில பொருள் வாங்கும்படியாகும்.

## கன்னியா ராசி.

### உத்திரம் 2-ம்பாதம் முதல் ஹஸ்தம் சித்திரை 2-ம் பாதம் முடிய.

ஏழில் கேதுவும், நாலில் சனியும், ராசியில் ராகுவும், இரண்டில் குருவும் இருக்கிறார்கள். இதனால் செய்காரியங்களில் பொறுப்பு மிகுதியும், சிலவுகள் அதிகமாவதும் உண்டாகும். நிர்வாகத்தில் சிரமம் ஏற்படும். சிலருக்கு வெளியூர் போக நேரும். தெய்வீக காரியங்களில் சிரத்தையுண்டாகும். பிற ஜனங்களால் நன்மதிப்பு ஏற்படும். உத்தியோகத்தில் அனுகூல மாற்றம் ஏற்படும். வியாபாரத்தில் ஆதாயம் ஏற்பட்டு வரும்.

## துலா ராசி.

### சித்திரை 3-ம்பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய.

சிலருக்கு இருப்பிடம் மாறும்படியாகுதல் அல்லது வெளியூர் போய்வர ஏற்படும். செய்தொழிலில் அலைச்சலும் சோர்வும் ஏற்பட்டுவரும். குடும்ப சிந்தனைகள் அதிகமாகும். தன நடப்பில் சௌகர்ய குறைவு ஏற்பட்டுவரும். பிறர் உதவியை நாடும்படியாகும். வியாபாரத்தில் ஓரளவு வருமானமேற்பட்டுவரும். பந்துக்களால் சிறிது கிலேசமேற்பட்டு வரும். மத்தியில் தேக சுகம் சிறிது பாதித்து குணமாகும். நிர்வாகத்தில் சிரமமேற்பட்டு வரும்.

## விருச்சிக ராசி.

### விசாகம் 4ம்பாதம் முதல், அனுஷம் கேட்டை முடிய.

சனி குடும்பத்திலும், கேது பஞ்சமத்திலும், ராகு லாபத்திலும் இருக்கிறார்கள். 13உ குரு ராசிக்கு வருகிறார். இம்மாதம் முற்பாதி வரையில் எதிலும் தடைகளேற்பட்டுவரும். குடும்ப நடப்பில் சில சச்சரவுகளும் பந்துக்களால் வருத்தமும் ஏற்பட்டு வரும். தெய்வீக சிந்தனை வலுத்து வரும். பின்பாகத்தில் முயற்சிகள் கைகூடும். முன்னேற்றத்திற்கான சூழ்நிலைகள் உண்டாகும். வெளியூர் போய்வர நேரிடும். தொழிலில் ஆதாயமேற்படும். உத்தியோகத்தில் சௌகர்யமுண்டாகும். சுப விஷயங்களில் சிலவுசெய்தலும் ஏற்படும்.

## தனுர் ராசி.

### மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய.

செய்தொழிலில் சிலருக்குக் கூட்டு சம்மந்தமேற்படும். ஆதாயத்திற்கான முன்னேற்பாடுகள் கூடிவரும். குடும்ப சௌகரியமும், பொருள்சேர்க்கையும் உண்டாகும். வரவேண்டியவை வசூலாகிவிடும். சிலருக்கு பூமி, சொத்து சம்மந்தமான அனுகூலம் உண்டாகும். புண்ணிய காரியங்களில் சிலவு செய்ய நேரும். மத்தியில் சிறிது தேக சுகம் பாதித்து குணமாகும். உத்தியோகத்தில் ஆதரவு ஏற்பட்டு வரும்.

---

**கூட்டத்தில் விளையாடுவது அடக்கமின்மை.**

## மகர ராசி.

### உத்ராடம் 2ம் பாதம் முதல் திருவோணம் அவிட்டம் 2ம் பாதம் முடிய.

குரு பத்திலும், சனி விரயத்திலும், அங்காரகன் நான்கிலுமிருக்கிறார்கள். இதனுல் குடும்பத்தில் வைத்திய வகையில் சிலவுகளேற்படும். சிநேகிதரால் நன்மையுண்டாகும். வியாபாரத்தில் சில தடங்கல் ஏற்பட்டு கூடிவரும். உத்தி யோகத்தில் மாற்றமேற்படும். பெரிய மனுஷர்களின் ஆதரவு உண்டாகும். புதிய முயற்சிகளில் அனுகூலமும் முன்னேற்றமும் உண்டாகும். சில பொருள் அனுகூலமான வகையில் விற்பனை செய்ய நேரும். சிலருக்கு வெளியூர் போய் வர நேரும்.

## கும்ப ராசி.

### அவிட்டம் 3ம்பாதம் முதல் சதயம் பூரட். 3ம்பாதம் முடிய

குரு பாக்கியத்திலும், சனி லாபத்திலும் அங்காரகன் மூன்றிலும் இருக்கி ருர்கள். இதனுல் வர்த்தகத்தில ஆதாயம் கூடும். பிறர் சகாயம் ஏற்பட்டு வரும். தன நடப்பில் சௌகர்யமுண்டாகும். குடும்ப சுகமும் தெய்வீக காரியங் களில் சிலவும் ஏற்படும். வெளியூர் போய்வர நேரும். முக்கியஸ்தர்களின் சந்திப்பு உண்டாகும். உத்தியோகத்தில் வருமானம் கூடும். சிலருக்குப் புதிய வகையில் உத்தியோகம் ஏற்படும். பந்துக்களிடமிருந்து நற்செய்தி கேள்விப் படும்படியாகும்.

## மீனராசி.

### பூரட்டரதி 4ம் பாதம் முதல் உத்ரட்டாதி ரேவதி முடிய.

ராசியில் கேதுவும், ஏழில் ராகுவும், எட்டில் குருவும், பத்தில் சனியும் இருக்கிருர்கள். இதனுல் 13வ வரை பழைய சிரமங்கள் சிறிது நீடித்து வரும். ராஜாங்க மூலம் கவலை ஏற்பட்டு நீங்கும். பணவசதி குறையும். சிலருடன் பகை ஏற்படும். குடும்ப நடப்பில் திருப்தியான போக்கு இராது. அலைச்சல் அதிகமாகும். பிற்பகுதியில் நன்மையுண்டாகும். செய்தொழிலில் நிம்மதி ஏற் படும். புதிய மாற்றங்களால் நன்மையேற்பட்டுவரும்.

---

## மாஸ விரதாதி விசேஷம்.

**மார்கழி தேவர்க்கு உஷ: காலமாம்.** அப்பொழுது தூங்காமல் பகவானை ஆராதிக்கவேண்டும். பயத்தம் பொங்கல் நிவேதநத் திற்குச் சிறந்தது. திருப்பாவை எம்பாவை பஜனை செய்ய வேண் டும். திருவாதிரையும் வைகுண்ட ஏகாதசியும் உள்ள மாதம். மாஸங்களில் தான் மார்கழி என கீதாசார்யன்.

**10வ தத்தாத்ரேய அவதாரம்.** ஆருத்ராபிஷேகம். 29வ போகிப்பண்டிகை. தேவேந்த்ரனது பூஜா திநமாக இருந்தது. கிருஷ்ணன் அதை நிறுத்தி கோவர்த்தந கோப்ராம்மண பூஜை யாகச் செய்தார். ஸங்க்ராந்தி தேவர்களின் பகற்காலம். ஸூர்ய நாராயண பூஜை செய்யவேண்டும். [கோபூஜை, ஸங்க்ராந்தி பூஜைகள், 27 ந. பை. தபால் சார்ஜுடன். குருகுல வெளியீடு.]

---

**பெரியோர்முன் கக்ஷங்களைக் காட்டாதே.**

# ஹாலாஸ்ய மஹிமை.

## ஸ்ரீ மீனாக்ஷி தேவியின் ஆக்ஷி.

**கை**லாயத்திலிருந்து வந்த அநிந்திதை, கமளனீ என்ற இரு தோழிகளுடனும் சேர்ந்து ஸகல கலைகளையும் பயின்றாள். ஆண்பிள்ளைக் கேற்றவண்ணம் யானை ஏறுதல் குதிரை ஏறுதல் முதலியவைகளையும் பயின்றாள். யௌவந வயது வந்தது. தான் தரித்த கிரீடத்தை மீனாக்ஷிக்கு அளித்தான் பாண்டியன். நல்ல நாளிலே பட்டாபிஷேகம் செய்வித்தான். தன்னிலும் பன்மடங்கு சிறப்பாக தேவி பூமியாள்வதைக் கண்டு பூரித்தான். வயது முதிர்ந்தது. விண்ணுலகஞ் சென்றான். தந்தைக்குச் செய்யவேண்டிய பரலோக கார்யங்களை முடித்து மதுரையை ஆண்டுவந்தாள் மீனாக்ஷி.

விஶ்வாவதி என்ற கந்தர்வப் பெண் பார்வதி தேவியை விரைவில் தர்சிக்க விரும்பினாள். தந்தை சொற்படி மதுரா நகரம் வந்து ஓராண்டு கடுந்தவம் புரிந்தாள். தேவி சிறிய குழந்தை உருவில் வந்து தர்ஶநம் தந்தாள் உனக்கு யாது வரம் வேண்டும்? என வினவ இந்த க்ஷேத்ரத்தில் பாண்டிய வம்ஶத்தில் இங்ஙனம் பெண்ணாகத்தோன்றி ஶக்தி பீடங்களில் இந்நகரை ஒன்றாகச் செய்து பக்தருக்கருள்புரிய வேண்டுமென்றாள்.

## ஸ்ரீ மீனாக்ஷியின் திக் விஜயம்.

தாய் காஞ்சநமாலை மகளைக்கண்டு மகிழ்ந்தாள். ஆனால் மணமாகாக் குறையால் வருந்தினாள். அன்னைக்கு ஆறுதல் கூறி தேவி திக்விஜயம் செய்யப் புறப்பட்டாள். நால்வகை சேனையும் பின் தொடர்ந்தது. தெய்வப்பிறவி வாய்ந்தவள் மீனாக்ஷி என அறிந்தவுடன் எவரும் போர் செய்ய விரும்பவில்லை. அபரிமிதமான காணிக்கைகளைத் தந்து தேவி அருளைப் பெற்றுச் சென்றனர். பூலோக மெல்லாம் ஜயித்து வானுலகம் சென்றாள். இந்திரனது சேனைகள் "ஒரு பூலோகப் பெண்ணுக்கு அஞ்சுவதா?"

---

பெரியோர் முன் காலமேல் காலைப்போட்டு உட்காராதே.

எனப் போர் துவக்கினர். அன்னே, ஆண்கள் அனைவரும் ஆச்சர்யப்படும்படி தேவசேனையை முறியடித்தாள். ஆங்குள்ள கல்ப விருக்ஷம் காமதேநு சிந்தாமணி முதலியவற்றை அளித்து அமராதிபன் அன்னைத் தாளில் வணங்கினான். அங்ஙனமே அஷ்டதிக்பாலகர்களையும் ஜயித்து கைலாஸம் சென்றாள்.

## ஸ்ரீ மீனாக்ஷி விவாஹம்.

சிவ கணங்களும் உண்மை அறியாமல் தேவியுடன் போர் செய்தனர். அவர்கள் கோபங்கொண்டு தேவிமீது செலுத்தும் அம்புகள் அன்னை அருகே செல்லாமல் இடையிலே வீழ்ந்தன! தேவி தனது வீர்யத்தைக் காட்டி சிவகணங்கள் சிதைந்து ஓடும்படி யுத்தம் செய்தாள். இதை அறிந்த பிரும்மாவும், விஷ்ணுவும், நந்தியும் சிவனிடம் வந்து இதைத் தெரிவித்து வணங்கிச் சென்றனர்! கைலாஸநாதன் எதிரில் வந்து போர்க்கோலத்துடனுள்ள தேவியைக் கண்டு களித்தார்.

போர்க்கோலத்துடன் எதிரில் நின்ற ஶிவனைக்கண்டவுடன் ஸ்ரீ மீனாக்ஷியினது மூன்றாவது ஸ்தநம் மறைந்தது. அஶரீரி சொற்படி இவரே கணவன் என உணர்ந்து தேவி தலை குனிந்தாள். மீனாக்ஷி! உன்னைவிட்டு ஒரு நிமிஷமும் விலகாத நான் நீ திக் விஜயத்திற்குக் கிளம்பும் போதே ஹாலாஸ்ய லிங்கத்திலிருந்து கிளம்பி உன்னைப் பின்தொடர்ந்தேன். அதை ஒருவருமறியார், மதுரை செல்! எட்டாவது நாள் ஸோமவாரத்தன்று உன்னை மணப்பேன் என்றார்.

காஞ்சநமாலையின் கவலை நீங்கிற்று. மதுரை ஜனங்களின் மநம் மகிழ்ந்தது. மணத்திற்குரிய ஸகல ஏற்பாடுகளும் செவ்வனே செய்யப்பட்டன. மதுரை கைலாஸம் போல் விளங்கிற்று. வேதியர் வேந்தர் முதலிய அனைவரும் வந்து குவிந்தனர். முப்பத்து முக்கோடி தேவர்களும் சூழ பரமனும் ஸுந்தரவடிவனாக மதுரையை அணுகினார். வாயு ஆலவட்டம் வீச, அக்நி தூபமேந்த, வருணன் பொற்கொடை பிடிக்க, சேஷன் ரத்நதீபம் ஏந்த, நிருரிதி கண்ணாடி காட்ட, ஹர ஹர என்ற ஶப்தம் வானைப் பிளக்க,

குண்டோதரன் சந்தர வட்டக் கொடை பிடிக்க சிவனுர் கல்யாண மண்டபத்திற்கு வந்தார். தேவப் பெண்கள் அம்மை மீனுக்ஷியை அலங்கரித்து அய்யன் அருகே அமர்த்தினர். திருமால் தாரைவார்த்துத் தந்தார். சதுர் முகன் வைதிக கார்யங்களைச் செய்வித்தார். மங்கள ஸூத்ரத்தை ஸுந்தரேசன் ஸுந்தரியின் கழுத்தில் கட்டினுர். வானவர் மலர் மாரிப் பொழிந்தனர். வேதியர் வேதமோதி வாழ்த்தினர். தேவ துந்துபி முழங்கிற்று. கந்தர்வர் காநம் செய்தனர். அப்ஸரஸ்ஸுகள் ஆடினர். காஞ்சநமாலை கோதாநம், பூதாநம், ஸ்வர்ணதாநம், வஸ்த்ரதாநம் முதலியன வழங்கினுள். அவள் கருத்துக் கிசைய ஸோமஸுந்தரன் பாண்டிய நாட்டின் பார்த்திவனுனுர். நாட்டிற்கு நலம்புரிய, வேண்டியவர்க்கு வரந்தர "இம்மையே நன்மை தருவார்." இஹாபீஷ்டப்ரதாயகர், என்ற ஶிவலிங்கத்தை மேற்கு முகமாக ப்ரதிஷ்டை செய்து தானும் வழிபட்டார்.

**வெள்ளியம்பல நடனம்:** வந்தவர் அனைவர்க்கும் விருந்து வழங்க பதஞ்ஜலியும் வ்யாக்ரபாதரும் பொன்னம்பல நடனத்தைத் தர்சித்த பின்பே புஜிப்பதாகக் கூறினுர். இறைவன் இச்சைப்படி மதுரையில் வெள்ளியம்பலமும் அதனிடையே மணிமய பீடமும் தோன்ற வலது திருவடியை ஊன்றி இடதுகாலால் திவ்ய நடநம் புரிந்தார் ஸுந்தரர். சிதம்பரம் பொன்னம்பலத்திலே இடது காலை ஊன்றி வலது கால் நடநம் கண்ட முனிவர் இங்கு இதைக்கண்டு மெய்மறந்தனர். இங்கு இதே போல் நடராஜமூர்த்தி விளங்கவேண்டும். இதைத் தர்சித்தவர் மறுபிறவி இல்லாதிருக்கவேண்டும் என்ற வரத்தைப்பெற்று பூஜித்தனர்.

**குண்டோதரன் விருந்து:** ஸுந்தரேசன் மணத்தில் பதிநான்கு உலகத்தவரும் வருவர் என காஞ்சனமாலை உணவு சமைத்தாள். மாநிடர் உணவு வானவற்கேற்குமோ? பாகம் செய்ததெல்லாம் வீணுகின்றதே? என்ருள். அருகிலிருந்த குண்டோதரன் வயிற்றில் வாடபாக்நியை ஏவி இவன் ஒருவனுக்கு அன்னமளி போதும் என்ருர்

---

**பெரியோர் அமர்ந்து உட்கார் என்ருலுட்கார்.**

ஸுந்தரேசன். அவன் இலையிலமர்ந்து ''போடு! போடு'' இன்னும் போடு! என சமயல் செய்த அனைத்தையும் உண்டான். போதுமா? என்றுகேட்க என் பசி தீர வில்லை இன்னும் போடென்ருன். பாகம் ஆகாத அரிசி கரிகாய் அனைத்தையும் உண்டு மேலும் பசி! பசி! என் ருன். மீனுக்ஷியும் தாயும் வெட்க மடைந்தனர். பகவான் அன்னபூர்ணு தேவியை நினைக்க நான்கு புறங்களிலும் தயிரன்னக் குழிகள் தோன்றின. அதை உண்டு குண்டோதரன் பசி அகன்றது. ஆனல் தாஹம் அதி கரித்தது. கிணறு தடாக நீரெல்லாம் போதவில்லை. ஸுந்தரேசன் கங்கையை அழைக்க அதிவேகத்துடன் வந்த அவள் வேகவதீ என்ற பெயருடன் மதுரையை அலங்கரித்தாள். குண்டோதரனது தாஹம் அகன்றது. மேலச் சித்திரை வீதியில் அன்னக்குழி மண்டபத்தைக் காணலாம் இன்றைக்கும்.

**ஏழுகடல் தோன்றல்:** ஒரு ஸமயம் காஞ்சனமாலை கௌதமரை வணங்கி எதனுல் பாபமகலும்? எதனுல் முக்திபெறலாமென்ருள். புண்ய நதீ ஸ்நானத்தாலும் அந் நதிகள் சேரும் கடலில் ஸ்நானம் செய்வதாலும் முக்தி என் ருரவர். இதை மீனுக்ஷி ஸுந்தரேசனிடம் கூற அவர் ஏழு கடல்களையும் இங்கு வருக என அழைத்தார். ஏழு வர்ணங் களுடன் அவைகள் மதுரைக்குவர விதவையான தான் மாத்ரம் கடல் நீராடுவது உசிதமோ! என்ருள் காஞ்சந மாலை. ஸுந்தரேசன் உடனே மலயத்வஜ பாண்டியனை நினைக்க கைலாசத்திலிருந்து அவர் ஓடிவந்தார். ஸுந்தரேசன் ஆணைப்படி இருவரும் அதில் மூழ்கினர். பூத உடலை விட்டு திவ்ய தேஹம் பெற்று ஸகல உலகங் களையும் கடந்து கைலாஸம் சென்று பேரானந்தம் பெற்ற னர். தடாதகாதேவி ஸுந்தரேச பாண்டியனைக் கொண் டாடித்துதித்தாள்.

மீனுக்ஷியும் ஸுந்தரேசரும் பார்வதீ பரமேச்வரர் அல்லவா? இருவரும் ஸதிபதிகள்போல் இல்லற வாழ்வு நடத்தினர். மனைவி மணுளன் இருவர்களது இன்பமும் ஒன்ருகச் சேருவது புத்ர பாக்யம்! மீனுக்ஷி கர்ப்பிணியா ளுள். பும்ஸவநஸீமந்தம் செவ்வனே நடந்தேறியது.

---

# ஆயுர்வேதம் (3)

டாக்டர் V. K. வெங்கிடசாமி, M. B., B. S., F. I. M.

**சுக்கு:** இதற்கு மஹா ஔஷதம் எனப்பெயர் ஒன்று உண்டு. உஷ்ணவீர்யமானது. ருசியை உண்டாக்கும். உணவை ஜீர்ணிக்கும். தேகத்தில் லகுத்தன்மையையும் ஸ்நிக்தத்தையுமுண்டாக்கும். வாத கபஹரம். சுக்லத்தை வ்ருத்திசெய்யும். மலத்தைக் கட்டும். அஜீர்ணம், வாந்தி, வயிறு உப்பஸம் (ஆனகம்) வயிறு வீக்கம் (உதரம்) சூலம் (வயிற்றுவலி) வீக்கம் அர்சஸ் (மூலம்) ஆமவாதம், ஶ்வாஸம் முதலிய வியாதிகளுக்கு உபயோகமானது. சுக்கு பச்சையாக இருக்கும்போது **இஞ்சி** எனப்பெயர். சுக்கின் குணங்களே இதற்கும் உண்டாம்,

***சிலபிரயோகங்கள்:–*** (1) இஞ்சியைச் சாப்பிடும்முன் ஸ்வரஸமாக (அரைஅவுன்ஸ்) உட்கொண்டால் ருசியும் பசியும் உண்டாகும். (2) சுக்கை முலைப்பாலில் அறைத்து நெற்றியில் தடவி அனலில் காய்ச்சினால் தலைவலிபோகும். சுக்கை நீர்விட்டரைத்து கழுத்தின் மீது போட தொண்டை வலி போகும். புருவத்தின் மீது தடவினால்கண் வலிகுறையும். மூட்டு வீக்கங்களும் சுக்குப் பற்றால் குறையும். (3) சுக்கையும் கற்கண்டையும் சமபாகமெடுத்து பொடி செய்து காலை மாலை இளநீரில் 20 கிரைன்ஸ் உட்கொண்டால் நெஞ்சுவலியும் ச்வாசரோகமும் போகும். (4) சுக்குத்தூளை 60 கிரையின்ஸ் காலையில், அப்போது கறந்த ஆழாக்கு பசும்பாலில்கலந்து உட்கொண்டால்மார்வலிக்கு நல்லது. (4) சுக்கு கஷாயம் (ஒரு பாகம் நறுக்கியசுக்கு 4 பாகம் ஜலம் எடுத்து அதை நாலில் ஒருபாகமாக சுண்ட வைத்தல் 2 அவுன்ஸ் காலை மாலை சாப்பிட நாட்பட்ட அஜீர்ணரோகமும் ஜுரமும் நீங்கும். (5) சுக்கையும் வெட்டி வேரையும் சமமாக கஷாயம் போட்டு உட்கொள்ள அதிஸாரம் நிற்கும். (6) சௌபாக்ய **சுண்டீ** என்ற யோகம் 90 கிரையின்ஸ் அளவில், அருசி, சூலம் மார்வலி பக்கசூலை மூத்ரகிருச்ரம் முதலியவைகளுக்கு நல்லது.

---

**தக்கவருக்குத் தவறாமல் நமஸ்காரம் செய்.**

(7) **ஆர்த்திரக ரஸாயனம்** அரை தோலா அளவில் அருசியில் மிக உபயோகமான யோகம்.

குறிப்பு:- யோகங்களான மருந்துகளை வைத்தியர்களிடமிருந்தாவது நம்பகமான மருந்து தயாரிப்பவரிடமாவது வாங்கிக்கொள்வது நல்லது.

தோஷங்களில் வாதம் முக்யமானதால் சிறிது விவரமாய் அறிந்து கொண்டோம். இப்பொழுது பித்தம், கபம் என்ற தோஷங்களைப்பற்றி சுருக்கமாய் தெரிந்து கொண்டால் போதும். இத்துடன் ஸப்த தாதுக்கள் மலங்கள் என்பவைகளைக் குறித்தும் அறியவேண்டும்.

**பித்தமானது** ஸ்நிக்தம், தீக்ஷ்ணம், உஷ்ணம், லகு, விஸ்ரம் (வாசனையுடனிருத்தல்), ஸரம் (பருகுந் தன்மை), திரவம் என்ற குணங்களையுடையது. இதன் முக்ய ஸ்தானம் நாபி இருதயம் இவ்விரண்டிற்கும் மத்தியிலுள்ளது. இரைப்பை, வியர்வை, நிணநீர், இரத்தம், இரஸம், நேத்ரம், சர்மம் இவைகளிலுமிருக்கும். ஆயுள் காலம், பகல், இரவு, போஜனம், இவைகளின் மத்திய காலத்தில் பலம்பெறும். ஜாடராக்னியை தீக்ஷ்ணமடையச் செய்யும். குடலை (மலத்தை) மிருதுவாக்கும். இதன் செயல்களாவன எரித்தல், சுடுதல், சிவத்தல், வியர்த்தல், மயக்கமுறல், வெறிபிடித்தல், சமைத்தல், மெலிதல் முதலியன. தேககாந்தி, மதி, புத்தி, பராக்ரமம், கண் பார்வை, பசி, தாஹம், கடு, அம்ல ரஸம் இவைகளுடன் சம்மந்தப்பட்டது. இது விருத்தியானால், மலம், மூத்திரம் கண்கள், சர்மம் இவை மிக்க மஞ்சள் நிறமடையும். பசி, தாகம், நித்திரையின்மை அதிகரிக்கும்.

வாதத்தைப் போல பித்தமும் ஐந்து வகைப்படும். (1) **பாசகம்:-** குடலில் ஆமாசயம் என்ற ஜீர்ணம் ஆரம்பிக்கும் இடத்திற்கும் பக்வாசயம் என்ற உணவு பக்குவமடையுமிடத்திற்கும் நடுவிலுள்ளது. அக்னியுடன் கலந்து ஜீர்ணத்திற்கு உதவுகிறது. (2) **ரஞ்ஜகம்:-** ஆமாசயத்தில் ஆகார சத்திற்கு ஒருவித நிறம் தரும். (3) **ஸாதகம்:-** இருதயத்தினின்று புத்தி, மேதை, அபிமானம் முதலிய குணங்களுக்கு உதவுகிறது.

---

**அவர் ஆசீர்வாதம் நமக்கு நன்மையைத் தரும்.**

(4) **ஆலோசகம்:-** கண்ணின் மத்தியிலிருந்து கொண்டு உருவங்களை உணர்த்தும். (5) **பிராஜகம்:-** சர்மத்தினின்று தேகக்காந்தியைத்தரும்.

அதிகரித்த பித்தம், விரேசனம், கிருதபானம், சீதவீர்ய வஸ்துக்கள், மதுர-திக்த-கஷாயரஸங்கள், மனதிற்கினிய கந்தங்கள், ஆபரணங்கள், சங்கீதம், இயற்கை வனப்பு, மித்திரர்கள், மனைவி முதலியவைகளால் சாந்தமடையும்.

**கபமானது** ஸ்நிக்தம், சீதம், குரு, மந்தம், மழமழப்பு, நிலைத்திருத்தல், மிருதுத்தன்மை என்கிற குணங்களையுடையது. இதன் முக்ய ஸ்தானம் இருதயத்திற்கு மேலிடம். தொண்டை, சிரஸ், பூட்டுகள், இரைப்பை, இரஸம், நாசி, நாக்கு, மேதஸ் இவ்விடங்களிலுமிருக்கும். ஆயுட்காலம், பகல், இரவு, போஜனம், இவற்றின் ஆரம்ப காலத்தில் பலம்பெரும். ஜாடராக்னியை மந்தம் அடையச்செய்யும். குடலை குரூரமும் மிருதுவுமின்றி மத்திமமாகச் செய்யும். இதன் செயல்களாவன:- தேகத்திற்கு திடத்தன்மை உண்டு பண்ணல், எலும்பு-பூட்டு இவைகளைக் கட்டியமைத்தல், பொருமை அதிகமாதல், நித்திரை, அசைவற்றுப்போதல், மந்தமாக வேலை செய்தல் முதலியன. அது விருத்தியானல் அக்னி மாந்தியம், வாயில் நீர் சுரத்தல், சோம்பல், தேகம் பாரமாதல், சர்மம் வெளுத்தல், குளிர்ச்சியடைதல், அவயவத் தளர்ச்சி, சுவாஸ காஸம், அதிக நித்திரை இவைகள் உண்டாகும்.

மற்றதோஷங்கள் போல, கபமும் ஐந்து வகைப்படும். (1) **அவலம்பகம் :-** மார்பினின்று இருதயத்திற்கும் மற்ற அங்கங்களுக்கும் ஆதாரமளிக்கும். (2) **கிலேதகம்:-** ஆமாசயத்தில் உணவை நீராக்கும். (3) **போதகம்:-** நாக்கினின்று சுவை யறியும். (4) **தர்ப்பகம்:-** சிரஸில் தங்கி இந்திரியங்களுக்கு திருப்தி உண்டாக்கும். (5) **சிலேஷகம்:-** சந்திகளை நெகிழவிடாமல் செய்யும்.

அதிகரித்த கபம், வமனம் (வாந்தி), விரேசனம், உஷ்ணவீர்ய-கடு-திக்த-கஷாய ரஸ வஸ்துக்கள், தேன், மது, சிற்றின்பம், கண் விழித்தல், தேக உழைப்பு,

---

உபவாஸம், தூமபானம், மனக்கவலை, எண்ணெயின்றி தேகமர்த்தனம் முதலியவைகளால் குறையும்.

தோஷங்கள் க்ஷீணிப்பதாலும், தேகக் கோளாறுகள் உண்டாகும். உதாரணமாக வாதக்குறைவால் சரீரம் இளைத்தாலும், பேசுவதில் பிரியமின்மையும், பித்தக் குறைவால் அக்னி மாந்தியமும் தேகக்காந்தி குறைவும் கபக்குறைவால் தலைச்சுற்றலும், இருதயம் படபடத்த லும், சந்திகள் நழுவுதலும் உண்டாகும்.

தோஷங்கள் போலவே ஸப்த **தாதுக்களும், மலங் களும்** நமது தேகத்தைக் காத்து வருகின்றன. இரஸம், இரக்தம், மாம்ஸம், மேதஸ், அஸ்தி, ம்ஜ்ஜா, சுக்ரம் அல்லது சோனிதம் என்ற ஏழு தாதுக்கள் முறையே பிரீணனம் (உடலை திருப்தி செய்தல்), ஜீவனம் (ஓஜஸ்ஸை விருத்தி பண்ணல்), லேபனம் (சரீரத்தை மேடு பள்ள மின்றி வைத்தல்), ஸ்நேஹனம் (தேகத்தில் பசையை உண்டாக்கல்), தாரணம் (தாங்குதல்), பூரணம் (நிரப்புதல்), கர்ப்பாதானம் என்ற முக்கிய காரியங்களை உடையன. மலம், மூத்திரம், வியர்வை முதலிய மலங்கள் சரியான அளவில் கழிவதால்தான் உடல் வன்மை பெற்றிருக்கின்றது. தாதுக்களும் மலங்களும்கூட விருத்திக்ஷய மடைந்து தேகக்கோளாறுகளை உண்டுபண்ணுகின்றன.

தேக வியாதிகளன்றி **மனோ வியாதிகளும்** உண்டாகும். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மனத்தின் முக் குணங்களில் கடைசி இரண்டு தோஷங்கள்.

***வியாதிகளின் காரணம்:-*** சாதாரணமாய், வியாதிகள் சீதோஷ்ண கால வேறுபாட்டாலும், ஆஹாரக் கோளாறுகளாலும், விஹாரம் என்ற மற்ற ஞானேந்திரிய கர்மேந்திரிய காரியங்களின் அதி ஹீனமித்யா யோகங்களாலும் உண்டாகும். மேலும் பதினன்கு வேகங்கள் எனப்படும். அபானவாயு வெளிப்படல், மல மூத்திர விஸர்ஜனம், ஏப்பம், தும்மல், பசி, தாஹம், நித்திரை, சுவாஸ காஸம், கொட்டாவி, கண்ணீர், வாந்தி, சுக்ல சோணிதம் வெளிப்படல் இவைகளை அடக்குவதால் பல வியாதிகள் உண்டாகும்.

---

**பெரியோர் சொல்லைப் பணிவுடன் கேள்.**

# விநாயக புராணம்.

கணேஶ்வரோ கணக்ரீடோ கணநாதோ கணாதிப: என்பது முதல் அநந்த நாமா நந்தஶ்ரீ: அநந்தாநந்த ஸௌக்யத: வரை நூற்று எழுபத்தொன்பது சுலோகமுள்ளது கணேஶ ஸஹஸ்ரநாம.* இதன் பலன், ஸகல நோய்களும் அகலும். ஸந்ததி, ஸம்பத் உண்டாகும். இதன் ஸாரமாக இருபத்தோரு நாமாக்கள் கூறப்படுகின்றன.

ஓம் கணஞ்ஜயோ கணபதி: ஹேரம்போ தரணீதர:
மஹா கணபதிர் லக்ஷப்ரத: க்ஷிப்ரப்ரஸாதந:
அமோகஸித்திரமிதோ மந்த்ர: சிந்தாமணிர் நிதி:
ஸுமங்கலோ பீஜமாஶா—பூரகோ வரத: ஶிவ:
காஶ்யபோ நந்தநோவாசா ஸித்தோடுண்டுர் விநாயக: ॥

கணேஶனது வரத்தினாலும் ஸஹஸ்ரநாம பலத்தினாலும் பரமஶிவன் வெள்ளி மலையைத் நோக்கி ஓங்கார ஶரத்தினால் முப்புரத்தை எரித்தார். அவனது ஜீவன் ஶிவனிடம் வந்து லயமாயிற்று. இந்த்ரன் முதலியவர் அவரவர் பதவியைப் பெற்றனர். யக்ஞயாகாதிகள் முன் போல் நடந்தன.

***பார்வதி கணேஶனை அர்ச்சித்தல்:—*** திருபுரன் கைலாஸத்தைப் பிடித்துக்கொண்டதுமுதல் பார்வதி இமய மலையில் ஒரு குஹையில் ஏகாந்தமாக வஸித்து வந்தாள். கார்த்திகை பௌர்ணமியில் திருபுரன் கொல்லப்பட்டு ஶிவமானான். அன்று உபவாஸமிருந்து தீபதானம் செய்வோர் கோரிய பலனைப் பெறுவர். அன்றே பார்வதீ தேவி குஹையிலிருந்து வெளியில் வந்தாள். ஶிவனைக் காணாமல் சிந்தை கலங்கினாள். அங்குமிங்கும் அலைந்தாள். ஒரு சம்படவன் வந்து இமயனிடம் இதைக்கூறினான். ஓடோடி வந்து அவர் தேவியை ஸமாதானப் படுத்தி விநாயகன் அருளால் விரைவில் ஶிவனைப் பெறுவாய் என்று கூறினார். விக்நேஶரின் ஏகாக்ஷரீ ஷடக்ஷரீ பஞ்சாக்ஷரீ அஷ்டாக்ஷரீ இருபத்தெட்டு அக்ஷரமுள்ள மந்த்ரம், நல்ல மண்ணினால் செய்த ஒரு மூர்த்தி முதல் ஒன்பது மூர்த்திவரை பூஜைசெய்வதாலுண்டாகும் பயன், ஷோடஶ உபசார பூஜை, 21 தூர்வை, 21 மோதகம் மூலமந்த்ர ஜபம், பூஜை பூர்ணமாவதற்காக தக்ஷிணை,

---

* தமிழிலும் நாகரத்திலும் அர்த்தத்துடன் மாம்பலம் குருகுலத்தில் கிடைக்கும். தபால் செலவுடன் விலை அணா 14.

ஸ்துதி, மந்த்ரத்தை இத்தனை முறை ஜபிப்பதால் உண்டாகும் பலன், மண்ணினால் கணேசமூர்த்தியை அமைத்துப் பூஜித்தல், ஒரு மூர்த்திமுதல் நூற்றெட்டு மூர்த்திகளை அமைத்துப் பூஜிப்பதின் பலன் முதலியவைகளை விரிவாகக்கூறி மேலும் உரைத்தார் இமயன்.

ஆவணிமாத விநாயகசதுர்த்தியிலாரம்பித்து அடுத்த சதுர்த்திவரை நித்ய பூஜா பலன், சதுர்த்திகளில் மாத்ரம் பூஜிப்பதின் பயன். கணேசரை நாடி ஸ்த்ரீ புருஷர்களுக்கு ஆடை ஆபரணம் அளித்தல், அன்னதானம். பஞ்சமியன்று புந: பூஜை செய்து குழந்தைகள் சிலம்பம் பழக, வாத்ய கோஷத்துடன் ஸமுத்ரம் நதி குளம் முதலிய ஜலத்தில் விநாயகரை விடுதல், கணேச வ்ரதம் ஸர்வ பாபங்களையும் அகற்றி ஸகல ஸித்திகளையும் தரும் உத்தம வ்ரதம். சதுர்த்தி உபவாஸம், இரவு கண் விழித்து அவர் சரிதத்தைக்கேட்பது. மயில் அல்லது மூஷகவாஹநம் அமைத்தல் ஸ்வர்ணம் முதலிய ஸகல தாதுக்களாலும் விநாயகரை அமைத்தல் ஆகிய விஷயம் பரமசிவனால் ஸ்கந்தனுக்கு உபதேசிக்கப்பட்டது. இமவான் அதை பார்வதிக்குக் கூறினார்.

**கர்த்தமன் பூஜித்தல்**:— கர்த்தமன் எனும் பூபதி மிகச்சிறந்தவீரன். தர்மிஷ்டன். மநுநீதி தவறாமல் ஆக்ஷி புரிந்தான். அவன் நாடு ஸுபிக்ஷமாக இருந்தது. அகண்டமான பூமண்டலத்தையும் ஆண்டான். யாதொரு குறையுமின்றி உத்தம மனைவிகளுடனும் சிறந்த புத்ரர்களுடனும் சுகமாக வாழ்ந்து வந்தான். தற்செயலாக ப்ருகு எனும் முனிவர் அரசனிடம் வந்தார். சாஸ்த்ர விதிப்படி அவ்ரைப் பூஜித்தான். மஹர்ஷே! பூர்வ புண்யமில்லாமல் ஒருவன் ஸகல பாக்யங்களையும் பெற முடியாது. யான் முற்பிறவியில் எத்தகைய புண்யம்செய்தேன்? என வினவினான். க்ஞானக்கண்ணால் அதை அறிந்து, அரசே! முன்னும் நீ ஒரு க்ஷத்ரியனே. ஆனால் பொருளும் பலமும் இல்லாத பரம ஏழை. பொருளில்லார்க்கு இவ்வுலகமேது? கட்டிய மனைவியும் பெற்ற பிள்ளைகளும் உன்னை அவமதித்தார்கள். ஹிம்ஸித்தார்கள். அந்த துக்கத்தால் நீ வீட்டைவிட்டு காட்டிற்குச் சென்றாய். அதிருஷ்ட வசமாக ஸௌபரி முனிவர் உன் கண்ணில் பட்டார். அவரை

வணங்கி ஏழ்மை அகல ஒரு உபாயம்கேட்டாய். பிரும்மா விஷ்ணு முதலியவர்களும் கணேசனை ஆராதித்து அவர் அருளால் படைக்கும் ஶக்தியையும் பரிபாலந ஶக்தியையும் பெற்றனர். நீயும் இங்கே இருந்து ஓராண்டு சதுர்த்தி விரதம் செய்து பகவானை ஆராதி என்றார் அவர். அங்ஙனமே நீ ஆராதிக்க உனது வீடெல்லாம் ஒரே ஸ்வர்ண மயமாயிற்று. அஷ்டலக்ஷ்மியும் அங்கு வஸித்தாள். நீ முநிவர் உத்தரவு பெற்று ஊர் சென்றாய். மனைவி மக்கள் கணேசரின் அருளால் நீ செல்வம் பெற்றாய் என உணர்ந்து நீ செய்யும் கணேச பூஜைக்கு உதவி புரிந்தனர். உயிருள்ளவரை நீ விடாமல் அவரை ஆராதித்தாய். அந்த புண்யம் இந்த ஜன்மாவிலும் ஒப்பற்ற பலனைத்தருகிறது. என்று முநிவர் கூறியதைக் கேட்டு கர்த்தமராஜன் இடைவிடாமல் கணேச மந்த்ரத்தை ஜபித்து அவரைப் பக்தியுடன் பூஜைசெய்து முடிவில் ஆநந்த புவநம் சென்றான்.

**நளன் பெற்ற செல்வம் :—** நிஷத தேசத்தை ஆண்டு வந்த நளமஹாராஜனை, தேவர்களும் ஒப்பற்ற வீரன் தார்மிகன் என கொண்டாடினர். உலகில் அழகுள்ளவர்களை அடக்கி ஆங்காங்குள்ள அழகில் சிறிது சிறிதாக எடுத்து வந்து பிரும்மா நளன் மனைவியான தமயந்தியைப் படைத்தார். ஆதலால் தமயந்தி என காரணப் பெயர் பெற்றாள். பற்பல கஷ்டங்களை அனுபவித்தும் தர்மத்தை விடாதிருந்ததால் ஸகல விதமான போக பாக்கியங்களையும் பெற்றுவந்தார்களவர்கள்.

ஒருநாள் கௌதமரிஷி நளன் ஸபைக்கு வந்தார். அரசன் ஆசாரப்படி அவரை வரவேற்று உபசரித்தான். ஸத்பாத்ரமானதால் அவருக்கு ஏதேனுமளித்து கிருதார்த்தனாகக்கருதினான். மஹர்ஷே! ஏதேனும் பொருள் பெற்று எனக்கு அருள் புரியவேண்டும் என்றான். நள! உனது ஒப்பற்ற செல்வத்தைக் கண்டுகளிக்கவே வந்தேன். இந்த்ரலோகத்திலும் கிடைக்காததை உனது உயர் குணத்தால் அடைந்தாய்! எனக்கு ஒன்றிலும் விருப்பில்லை. யான் சென்று வருகிறேன் என்றார்.

இதைக்கேட்ட மன்னன் முநிவரை வணங்கி தாங்களே வியந்து என்செல்வத்தைக் கொண்டாடினீர்கள்.

மற்றவர்களுக்குக் கிட்டாதபாக்யம் எனக்கெப்படி கிடைத்தது? என்று வினவ, கௌதமர் கூறினர்:- அரசே! நீ முற்பிறவியிலும் பிப்பல நாட்டில் ஒரு க்ஷத்ரியனுக இருந்தீர். ஆனுல் பரம ஏழை. ஏழையை யார் மதிப்பர்! மதிக்காததுடன் அவமதிக்கவும் ஆரம்பித்தனர். சரத்தைவிட க்ரூரமான சொற்களால் உம்மைத் தாக்கினர். மானியான நீர் ஒருவரிடமும் கூருமல் காநகஞ்சென்றீர். வாடிய வதநத்துடன் வந்த உம்மைக்கண்டு கருணை கொண்டார் கௌசிகமுநி. உம்மை வரவேற்று உபசரித்தார்.

துக்ககாரணத்தைக் கேட்டு ஸகல தேவர்களாலும் பூஜிக்கப்படும் கணேஶ மந்த்ரத்தை உபதேசித்தார். ஶ்ராவண ஶுக்ல சதுர்த்தியில் ம்ருத்திகையினுல் விநாயகர் உருவை அமைத்து பூஜை செய். எப்பொழுதும் அவரை மநதினுல் நினை. ஒவ்வொரு சதுர்த்தியிலும் ஷோடச உபசார பூஜை செய் என்ருர். அப்படியே இதை ஓராண்டு செய்து முடித்தபின், அப்பிறவியிலேயே ரதங்கஜம் குதிரை முதலிய சேனைகளும் செல்வமும் உண்டாயின. தொடர்ந்து விடாமல் மேலும் விநாயக விரதத்தை அநுஷ்டித்தாய். அதனுல் இப்பிறவியில் இத்தகைய செல்வம் பெற்ருய் என்ருர். அதுமுதல் நளன் பன்மடங்கு அதிகபக்தியுடன் விநாயக பூஜை செய்து வந்தான்.

## இழந்த பதியைப் பெற்ருள் இந்துமதி.

மாளவ தேசத்தில் கர்ண நகரம் என்பது மிகச் செழிப்பானது. சித்ராங்கதன் என்ற அரசன் அதை ஆண்டுவந்தான். தாந தர்மத்தில் மிகப்ரஸித்தன். அழகில் மன்மதன். மஹாவீரன். அவனது கீர்த்தி உலகெல்லாம் பரவிற்று. அவனது மனைவி இந்துமதி. அவள் மஹாபதிவ்ரதை. அழகில் ரதி. அரசன் ஒருநாள் வேட்டையாட வநஞ்சென்ருன். நீண்டநேரம்வேட்டையாடி வெகு தூரம் சென்ருன். இருளான இடம்செல்ல ஆங்கு ஒரு ராக்ஷஸகோஷ்டியைக்கண்டான். தீரன் ஆனதால் அரசன் அஞ்சவில்லை. அதைக் கண்டு அங்கிருந்து ஒரு ராக்ஷஸி ஓடி வந்தாள். சித்ராங்கதனைக் கண்டவுடன் அவளது ராக்ஷஸகுணம் அகன்றது. அவனழகில் ஈடுபட்டு பலாத்காரமாக அவனைக்கட்டி யணைத்து அருகிலுள்ள

பணியாளரைப் பக்ஷித்தாள். இதனிடையில் இவள் செயலில் வெறுப்படைந்து அரசன் அருகிலுள்ள தடாகத்தில் மூழ்கினின்ருன். ஆங்கு ஜலக்ரீடை செய்துகொண்டிருந்த நாககன்யகைகள் மன்மதனைப் போன்ற மன்னனை அணைத்து சிற்றின்பமளிக்க வேண்டினர். இங்கும் இத்துன்பம் வந்ததே! என வருந்திஞன்.

தான் மணந்த மனைவியைத் தவிர மற்ற ஸ்த்ரீகளை தீண்டுவதில்லை என்ற ப்ரதிக்ஞையைக் கூறிஞன் அவன். பலமுறை பலவகையாக அவர்கள் வேண்டியும் மன்னன் மநம் சிறிதும் திரும்பவில்லை. எந்த பத்நியிடம் நீ ஆசை கொண்டு எங்களை ஏற்க மறுத்தாயோ அவளை விட்டு நீ பிரிந்திருப்பாய் என சபித்து அவனை நாகலோகம் அழைத்துச் சென்று சிறையிட்டனர். மன்னன் மனைவி இந்துமதி தன்பதி நீரில் மூழ்கி இறந்தார் என்பதைக் கேட்டு கதறினள். புத்ரனைக்கொண்டு இறந்தவனுக்கு செய்யவேண்டிய பித்ரு கர்மாவைச் செய்ய விரும்பினள், தர்மமறிந்தோர் பன்னிரண்டாண்டுகள் கழித்துச் செய்யலாம் என்றனர். இந்துமதி அதுவரை நல்ல ஆடை ஆபரணங்களை களைந்து விதவாதர்மத்தைக் கைகொண்டாள்.

பதினேரு ஆண்டுகள் சென்றபின் நாரதர் தற்செயலாக அங்கு வந்தார். இந்துமதியின் நிலையைக் கண்டு வருந்திஞர். நீ விதவாதர்மத்தை இப்பொழுதே விட்டுவிடு. உன் பதி ஓரிடத்தில் ஜீவித்திருக்கிருன் என்ருர். இதைக் கேட்டு பேரானந்தமடைந்து ஸாதுக்களுக்கு அபரிமிதமாக தாநம் வழங்கிஞள். நாரதரை வணங்கி பதி தன்னிடம் வந்துசேர ஒரு உபாயம் கூறவேண்டுமென ப்ரார்த்தித்தாள். நாரதர் சதுர்த்தி விரதத்தைக்கூறி அன்று ஒரு பலம் தீர்த்தத்தை அருந்தி உபவாஸமிருக்க வேண்டும் என்ருர். இந்துமதி மிகபக்தியுடன் விநாயக பூஜைசெய்து விரதத்தை அநுஷ்டித்தாள். ஓராண்டு முடிவதற்குள் நாக கன்யகைகளின் மநம் இளகிற்று. இவ்வளவு கஷ்டப்பட்டும் அரசன் தன் பிடிவாதத்தை விடாததால் நிராசை கொண்டு அரசனை விடுவித்தார்கள். அரசன் தனது நாட்டிற்குவரும் செய்தியைக் கேட்டு அனைவரும் ஆச்சர்யப்பட்டு ஆநந்தக்கடலில் மூழ்கினர். பன்னிரண்டாண்டு சென்றபின் ஒருவரைப் பார்க்க நேர்ந்தால் ஆலயத்தில்

அக்நி முன்னிலையில் காணவேணும் என்பது சாஸ்த்ர விதி. விதிப்படி விநாயக ஆலயத்தில அவருக்கு நீராஜநம் செய்து சித்ராங்கதனும் இந்துமதியும் ஒருவரை ஒருவர் கண்டு பேரானந்தம் பெற்றனர். சதுர்த்தீ விரதத்தின் பெருமையை யுணர்ந்து இருவரும் சேர்ந்து அதைவிடாமல் அநுஷ்டித்தார்கள்.

இமவான் இங்ஙனம் பல உதாஹரணங்களைக் காட்டி கணேஶ வ்ரதம் அநுஷ்டிக்கும்படி கூறினார். பார்வதி அங்ஙனமே கணேஶ விருதாநுஷ்டானத்துடன் பூஜித்தாள். பரமசிவன் அங்கு பிரத்யக்ஷமானார். பார்வதியும் பர்வத ராஜனும் அவரைப் பூஜிக்க சிவனும் சதுர்த்தி மஹிமையைக் கொண்டாடி பார்வதியுடன் கைலாஸம் சென்றார்.

## வேடன் ப்ருசுண்டி ரிஷியானான்.

மத்யதேசத்தில் ஸஹஸ்ரபுரம் என்ற நகரத்தில் ஶூரஸேநன் என்றோர் அரசனிருந்தான். புண்யஶீலா என்ற ராணியுடன் மநுநீதி தவறாமல் மாநிலத்தை ஆண்டான். ஒருநாள் மிகப்ரகாஶமான விமாநம் ஒன்று தனது ராஜ்யத்தில் ஆகாயமார்க்கமாகச் செல்லக் கண்டான். அது யாருடையதெனக் கண்டுவர சில தூதர்களை அநுப்பினான். சிறிதுதூரம்சென்று அவர்கள் ஆகாயத்தை நோக்கிப் பார்க்க விமாநம் பூமியில் விழுந்தது. அது இந்த்ர விமாநம் என தூதர் அறிந்துகூற அரசன் ஆசாரத்துடன் அங்கு சென்று அமராதிபனை அர்சித்து இவ்வழியாக வந்தகாரணம் யாது? விமாநம் வீழ்ந்த காரணம் யாதென்றான்.

ராஜன்! அவநியில் கணேஶ ஸாரூப்யம் — ஸமாந உருவம் பெற்ற ப்ருஶுண்டி எனும் முநிவரை தர்ஶித்து ஸ்வர்க்கம் சென்றேன். என் விமாநத்தைக் கண்டறிய நீ அனுப்பிய தூதரில் ஒருவன் குஷ்டரோகி. அது முற்கர்ம வினையால் வரும் பாப நோய். அவன் கண் பட்டவுடன் விமாநம் வீழ்ந்தது என்றான் சக்ரன். மறு உலகில் ஸாலோக்ய ஸாமீப்ய ஸாரூப்ய முக்தி பெறுவது ஸஹஜம். மாநிலத்தில் யார் எப்படி கணேஶ ஸாரூப்யம் பெற்றார்? என்று அரசன் கேட்க இந்த்ரன் கூறினார். தண்டகாரண்யதேசத்தில் நந்தூர நாட்டிலே நாமா என்ற வேடன் ஒருவன் இருந்தான். அவன் வழிப்போக்கர்களை

அடித்து திருடிவாழ்ந்தான். ஒரு வழிப்போக்கரைத் துரத்திக்கொண்டு வெகு தூரம் ஓடினன். தற்செயலாக கால் இடறி ஒருகுளத்தில் விழுந்தான். அதுகணேஶ தீர்த்தமெனும் புண்யஜலம்.

இவன் எழுந்து வருவதற்குள் வழிப்போக்கன் ஓடி ஒளிந்து விட்டான். அங்கு தெய்வச் செயலாக முத்கலர் எனும் கணேஶ பக்தர் வந்தார். அவரை அடித்துக் கொள்ளையிடுவோமென அருகில் வந்து தடியைத் தூக்கினன். உடனே அவன் மநம் மாறிவிட்டது. தீர்த்தம், ஸாது இவைகளின் தர்ஶநம் வீணுகுமா? தடியை எறிந்தான். தடி போல் விழுந்து எழுந்தான். ஐயா! நான் மஹாபாபி. பலரை அடித்துப் பலர்பொருளைக் கொண்டு வயிற்றை வளர்த்தேன். உம்மை அடிக்க வரும்போது உள்ளம் மாறிற்று. நீர் உத்தமர், இவ்வேழை நற்கதிபெற ஒரு வழி கூறும் என பலமுறை பணிந்தான். கருணாமூர்த்தியான முனிவர் அவனுக்கேற்றபடி கணேஶாயநம: எனும் நாமமந்த்ரத்தைக் கூறினர். தன் கையிலுள்ள உலர்ந்த தடியைப்பூமியில் நட்டு இதற்கு நித்யம் நீர் விட்டுவா. துளிர் விட்டு மரமாகும் போது யான் வருகிறேன் என்றார். அவன் த்ருடமான நம்பிக்கைகொண்டு ஆயிரமாண்டுகள் ஜபித்து வந்தான். தன்னை மறந்தான். உலர்ந்த தடியும் கொழுந்து விட்டது. முத்கலரும் வந்தார். அவன் புருவத்திலிருந்து சுண்டா எனும்துதிக்கை உண்டானதைக்கண்டார். ஆஶ்சர்யமடைந்து ப்ருஶுண்டர் என நாமம் சூட்டி கணேஶ ஏகாக்ஷரீ மந்த்ரத்தை உபதேசித்தார். ப்ரஶுண்டர் இடைவிடாமல் ஜபிக்க ஆறுவது மாஸத்தில் விநாயகர் ப்ரத்யக்ஷமானர். பல லக்ஷகல்பம் வரை ஜீவித்திருந்து பின்னர் ஸாயுஜ்ய முக்தி பெறுவாய். நீபூஜித்த இடம்நாமல என்று உனது முற்பெயரால் அழைக்கப்படும். இந்த மூர்த்தியை உபாஸிப்பவர் விரைவில் வேண்டிய ஸகல பலன்களையும் பெறுவார் எனக்கூறி மறைந்தார். என்று ஶக்ரன் கூற ஶூரஸேநன் உமது விமாநம் முன்போல் ஸ்வர்க்கம் செல்ல என்ன வழி? என்றான்.

## ஸங்கஷ்டஹர சதுர்த்தீ விரதம்.

இந்த விரதத்தை அநுஷ்டித்தவர் அப்புண்யத்தை அளித்தால் விமாநம் மேலே செல்லும். **கிருதவீர்யன்**

என்றோர் வேந்தனிருந்தான். அவன் மனைவி ஸுகந்தா. தர்மமே உருவாக வந்தவன் வேந்தன். கற்பின் உருவம் ஸுகந்தா. இவர் நாடு பொன்னாடு போலிருந்தது. மனிதர்க்குக் கிட்டாத ஸகல போகங்களையும் பெற்றான். புத்ரபாக்ய மொன்றுதான் அவனுக்கில்லை. ஶாஸ்த்ரம் கூறியபடி ஸகல கர்மாக்களையும் செய்தான். பயனுண்டாகவில்லை. மனம் வெறுத்து மனைவியுடன் தபோவனம் சென்றான். கடுந்தவம் புரிந்தான். இதைக்கண்ட நாரதர் பித்ரு லோகத்திலுள்ள இவர் தந்தையிடம் சென்றார். உமது புத்ரன் கிருதவீர்யன் புத்ரனைப் பெற வழிதேடும். இல்லையேல் அவன் இறப்பான். நீரும் ஸந்ததி அற்று நரகம் செல்வீர் என்றார். கிருதவீர்யனது தந்தை பிரும்ம லோகத்திற்கு விரைந்தார். பிரும்மாவிடம் சென்று இதை முறையிட்டார்.

மிகச்சிறந்த தர்மஶீலனான என்புத்ரனுக்கு ஏன்புத்ர பாக்யமில்லை? என வினவினர். அரசே! இவன் முற்பிறவியில் ஶாமா என்ற பஞ்சமன். இவனதுபுத்ரன் கணேஶன். இருவரும் உணவின்றி சிலகாலம் வருந்தினர். பசியின் கொடுமையால் வழிப்போக்கர்களில் பன்னிரண்டு பிராம்மணர்களைக் கொன்று அவர்களிடமிருந்த தனத்தைக் கொண்டு புஜித்தனர். இவர்கள் உணவில்லாமல் உபவாஸமிருந்த நாள் மாககிருஷ்ண சதுர்த்தி எனும் ஸங்கஷ்டஹர சதுர்த்தி. அன்று உபவாஸமிருந்து மறுநாள் காலை புஜித்தனர். அன்றிரவே இறந்தான் கணேஶன். அவன் சாகும் தருவாயில் கணேஶா என மும்முறை அழைத்தார் அவனைத் தந்தை. அறியாமலே இருந்த உபவாஸம், முடிவில் பகவந்நாம ஶ்ரவணம், இதனால் அவன் கணேஶ லோகம் சென்றான். ஶாமா என்பவன் சிலகாலம் சென்றபின் இறந்து அந்த உபவாஸ புண்யத்தால் உனது மகனாகப் பிறந்தான். உபவாஸ பலத்தால் ராஜபதவியும் பிரும்மஹத்தியால் புத்ரபாக்ய மில்லாமையும் தோன்றிற்று என்றார் பிரும்மா. அதற்கு பரிஹாரம் என்னவென்று அவர் கேட்க பிரும்மா ஸங்கஷ்டஹர சதுர்த்தி விரதத்தை அநுஷ்டிக்கும்படி செய் என்றார். அதை எப்படிச் செய்ய வேண்டுமென்றும் விவரித்தார்.

***ஸங்கஷ்டஹர சதுர்த்தீ விரதம்:—*** மாகமாதம் கிருஷ்ண பக்ஷம் செவ்வாய்கிழமை சதுர்த்தி வந்தால்

அன்றுமுதல் ஓராண்டுவரை விரதம் அநுஷ்டிக்கவேண்டும். பன்னிரண்டு மாத சதுர்த்திகளிலும் பூஜைசெய்து சந்த்ரோதய காலத்தில் அர்க்யம் தரவேண்டும். ஆவணி சதுர்த்தியில்-ஏழு லட்டுகளையும், புரட்டாசியில்-தயிரையும் மாத்ரம் சாப்பிட வேண்டும். ஐப்பிசியில் - சுத்த உபவாஸம், கார்த்திகையில்-பால், மார்கழி-உபவாஸம், தை-கோமூத்ரம், மாசி-எள்ளு, பங்குனி-நெய், சித்திரை-பஞ்சகவ்யம், வைகாசி-நெய், ஆனி-தேன், ஆடி-தேன் இவைகளைப் புஜித்து உபவாஸத்துடன் மற்ற நியமங்களையும் கைகொண்டு கணேசனுக்கு ஷோடச உபசார பூஜைசெய்து வந்தால் அவரவர்கோரியபலன் கிடைக்கும்.

**அங்காரக வாரம்:** சேரவேண்டியதன் காரணமென்ன என்று பிரும்மா விவரிக்கிறார். அவந்திநகரத்தின் அருகே ஓராச்ரமத்தில் **பரத்வாஜமுனிவர்** அக்னிஹோத்ரம் முதலிய வைதிக கர்மாக்களைச் செய்து கொண்டிருந்தார். ஒரு நாள் அப்ஸரஸ் ஒருவனைக் கண்டு ஆத்மசக்தியை இழந்தார் அவர். அந்த சக்தி ஒருகுழந்தை உருவமெடுத்தது. வேறுகதியில்லாததால் பூமிதேவி அதையெடுத்து வளர்த்தாள். அக்குழந்தை வளர்ந்து ஏழாம் ஆண்டில் என் பிதா எங்கே? என பூமியைக் கேட்டது. அவள் பரத்வாஜ முனிவரிடம் அழைத்துச்சென்று நடந்த விஷயத்தைக் கூறினாள். முனிவர் அவனை ஏற்று ஜாதகர்மா செய்து அங்காரகன் பௌமன் என பெயரிட்டார். காலத்தில் உபநயநம் செய்து கணபதி மந்த்ரத்தை உபதேசித்தார். அங்காரகன் ஆயிரமாண்டு நர்மதா தீரத்தில் கணேசனைநாடி கடுந்தவம் புரிந்தார். மாக கிருஷ்ண சதுர்த்தியில் சந்த்ரோதயம் ஆகும்போது கணேசர் ப்ரத்யக்ஷமானார். பௌமன் அவர்திருவடியைப் பணிந்து துதித்தான். யாது வரம் வேண்டுமெனக் கேட்டார்? எனக்குத் தாங்கள் தர்சநம் தந்தநாள் ஸங்கஷ்டஹர சதுர்த்தி என வழங்க வேண்டும், அன்று பூஜிப்போர் இஷ்டம் பூர்த்தியாக வேண்டும், நான் அமிருதம் உண்டு நவக்ரஹத்தில் ஒருவனாகவேண்டுமென்று அவன் வரம் கேட்டான். விநாயகர் ஸந்தோஷமடைந்து எல்லாவற்றையும் அளித்து மங்கள என்ற பெயர் வைத்து மறைந்தார். ஆதலால் மங்கள வாரத்துடன் சேர்ந்த சதுர்த்தி மிக விசேஷமானது.

அன்று செய்யும் ஒரு நாள் பூஜை நூறாண்டுகள் செய்த பூஜா பலனைத் தரும்.

மங்களன் கணேசர் சொற்படி அவந்தீ நகரத்தைப் பல ஆண்டுகள் ஆண்டுவந்தான். பகவான் பிரத்யக்ஷமான இடத்தில் **பாரிநேர** நகரமென்ற பட்டணத்தையும் அதில் கணேச ஆலயத்தையும் ப்ரதிஷ்டை செய்து மங்களகணபதி சிந்தித்ததை அளித்ததால் சிந்தாமணி கணபதி எனப் பெயரிட்டான். நவக்ரமுமாகி பலகாலமான பின் பரிவாரத்துடன் விநாயகலோகம் சென்றான்.

**சதுர்த்தியில் சந்த்ர தர்சநங்கூடாது:** மேலும் பிரும்மா கூறினர். நான் கைலாஸஞ்சென்றிருந்த போது நாரதர் ஓர் அரியபழத்தைச் சிவனிடம் அளித்தார். இதை யாருக்குக் கொடுக்கலாம்? என்று சிவன் என்னைக் கேட்க சிறுவனான குஹனுக்கே அளிப்பது நியாயமென்றேன். முதல் பூஜை விநாயகருக்கு என்பதை மறந்ததால் விநாயகர் தன்கணங்களுடன் கோரமான உருவமெடுத்து நான் செய்துவரும் ஸ்ருஷ்டிக்கு விக்நம் செய்தார். அச்சமயம் அங்கு வந்த சந்த்ரன் அவரைக்கண்டு நகைத்தான். ஆதலால் பிரகாசத்தை இழக்கும்படியும் ஒருவராலும் தர்சிக்க தகாதவனாகவும் தர்சித்தவன் பாபி என்றும் சந்த்ரனை சபித்தார். ஒளிமழுங்கி இருப்பிடம் தெரியாமல் இருந்தான் அவன். இதைக்கண்டு தேவர் வருந்தி சந்த்ரனுடன் விநாயகரிடம் சென்று வணங்கித் துதித்தார்கள். ஸந்தோஷமடைந்த பகவான் என் சொல் வீணாகாது, ஆதலால் விநாயகசதுர்த்தியில் பார்ப்பவனே பாபி ஆவான். சுக்ல த்விதியையில் சந்த்ரனைத் தர்சித்தால் புண்யம் உண்டாகும். எனது நெற்றியில் சந்த்ரன் கலை இருக்கட்டும். அதனால் நான் பால சந்த்ர கணபதி என பெயர் பெறுவேன் என்றார். அன்றியும் ப்ரும்மா தூர்வையின் பெருமையையும் கூறினர்.

**தூர்வையின் மஹிமை:** தக்ஷிண தேசத்தில் **ஜாம்பா** என்றோர் நகரமுண்டு. அதை ஆண்டுவந்த அரசன் **ஸுலபன்**. அவன் மனைவி **ஸுமுத்ரா**. இருவரும் சிறந்த குணமுடையவர். அன்றன்று நாம் செய்ய

வேண்டிய நித்ய கர்மாவில் புராணம் கேட்பது ஒன்று. இருவரும் அமர்ந்து பக்தியுடனதைக்கேட்டனர். அங்கே மதுஸூதநன் என்றோர் வேதியர் வந்தார். அவர் தபோதநம் நிறைந்தவர். பரம ஏழை. கிழிந்த ஆடையணிந்து வந்தார். கிழிசலால் மூடவேண்டிய இடம் தெரிந்திருந்தது. அரசன் பலரெதிரில் இதைக்கண்டு பரிஹாஸமாகச் சிரித்தான். அது மஹாபாபமல்லவா? பல்லாண்டு நரகயாதனையைத் தரும். கருணையுள்ள ஸாது ஸ்வல்பமாக சிக்ஷைதரக்கருதி கோபமுள்ளவராகி காளைபோல் பல்லை இளித்ததால் காளையாவாய் என்றார். இதைக்கேட்டு கோபங்கொண்ட ராஜன் மனைவி ஸுமுத்ரா அவரைக் கழுதையாகும்படி சபித்தாள். மதுஸூதனர் அவளைப் புலைச்சியாகும்படிச் சபித்தார். அரசன் காளையாகி ஏரில் பூட்டப்பட்டான். முனிவர் கழுதையாகி வண்ணனது துணிகளைச் சுமந்தார். ஸுமுத்ரா புலைச்சியாகி புல்லை அறுத்து விற்று ஜீவித்து வந்தாள். ஒருநாள் கடும் மழைக்கொட்டிற்று. சண்டாளி எந்த வீட்டில் ஒதுங்கச் சென்றாலும் அவளை விரட்டினர்கள். தற்செயலாக விநாயக ஆலயத்தில் வந்து ஒதுங்கினள். அதே இடத்தில் கர்மவசத்தால் காளையான அரசனும் கழுதையான முனிவரும் வந்து ஒதுங்கினர். பஞ்சமஸ்திரீ கொண்டுவந்த புற்கட்டிலிருந்து புல்லைப்பிடுங்கித் தின்றன அவைகள். அச்சமயம் பெருங்காற்று அடித்தது. அப் புற்காட்டிலிருந்து ஒரு அருகம்புல் விநாயக மூர்த்தி மீது வீழ்ந்தது.

அன்று விநாயகசதுர்த்தி. வந்திருந்த பக்தர்கள் கழுதை, காளை, பஞ்சமஸ்த்ரீ ஆகிய மூவரையும் ஆலயத்திலிருந்து விரட்டினர். அவை போகாமல் சண்டித்தநம் செய்ய சிநங்கொண்டு தடியாலடித்தனர். கோவிலைச் சுற்றிச்சுற்றி வந்து உள்ளேபோக முயன்றன. பக்தர்கள் விரட்டி அடிக்க ஆலயத்தை பலப்ரதக்ஷிணம் செய்தன. ஆதலால் கருணை கொண்ட விநாயகர் அவர்களுக்கு திவ்ய சரீரம் தந்து விமாநத்தில் ஏற்றி தன் உலகம் கொண்டுவர உத்தரவிட்டார். வழியிலுள்ள ஸித்தர்கள் தவத்தைநிறுத்தி இந்த ஆஸ்சர்யத்தைக் கண்டு வியந்தனர். இவர்கள் பாபம் நிறைந்தவர்களல்லவா? என்ன புண்யத்தால் நற்கதிபெற்றனர்? என கணங்களைக் கேட்டனர். புல்லுடன் தூர்வையை

அவள் கொண்டு வந்தாள். அந்த கட்டை அவ்விரண்டும் அவிழ்த்து இழுத்தன. அதிலிருந்து ஒருதூர்வை பகவான் மீது விழ்ந்தது. சதுர்த்தியன்று மழையால் உபவாஸ மிருந்து ஆலயத்தை ப்ரதக்ஷிணம் செய்தனர். அறியாமல் செய்த மிருகங்களிடமும் பகவான் கருணைகொண்டு பலனளித்தார் என்றூர்.

**தூர்வை அர்ச்சனை எப்படி தோன்றிற்று:?** இதை இந்த்ரனுக்கு நாரதர் உரைத்தார். **ஸ்தாவர** மெனும் நகரத்தில் **கௌண்டின்ய** முனிவர் கணேஶ பக்தனுக இருந்துவந்தார். ஜபம் கணேஶார்ச்சனை முதலிய கார்யங் களில் அவர் தூர்வையையே உடயோகிப்பார். **ஆஶ்ரயா** எனும் அவர் மனைவி வாஸனையுள்ள பலபுஷ்பங்கள் இருக்க தூர்வையையே ஏன் நித்யம் கணேஶருக்கு அளிக்கிறீர்? என்று வினவினுள். ப்ரியே! ஒருஸமயம் யமதர்மராஜன் இந்த்ர ஸபைக்குச் சென்றுன். அங்கு திலோத்தமை நர்த்தநம் செய்து கொண்டிருந்தாள். அவளது அழகில் ஈடுபட்ட யமனது மநம் கலங்கிற்று. தன்னை அறியாமல் தனது வீர்யத்தைக்கீழே சிந்தினுன். அது ஒருபெரும் அக்னி ஜ்வாலையைக் கக்கும் **அநலாஸுரன்** என்பவனுக மாறிற்று. அந்த ஜ்வாலை மூன்று உலகத்தவரையும் தஹித்தது. அமரர் அனைவரும் அச்யுதனை சரணம் அடைந்தனர். அவர் அநலாஸுரனது வீர்யத்தை அறிந்து இது நம்மாலாகாது. மும்மூர்த்தி களுக்கும் மேலான கணேஶனிடம் செல்லுங்கள் என்றூர். அங்ஙனமே அமரர் ஸர்வேசனைப் போற்றிப்பணிந்தனர். அவர் ஒரு பாலகனுக வந்து அஞ்சாதீர்கள்! யான் அவனி யில் முனிவர்களது ஆச்ரமத்தில் இருப்பேன். அரக்கனை என்னிடம் வரும்படி தூண்டுங்கள் என்றூர்.

அநலாஸுரனிடம் வந்து உனது உருவம் ஆஶ்சர்ய மானது. அதைவிட மிக ஆஶ்சர்யமான பிரும்மச்சாரி ஒருவர் அவனியில் இருக்கின்றூர் என்றனர். ஆனுல் அவனைப் பார்ப்போம் என முனிவர் ஆஶ்ரமத்திற்கு வந் தான் அநலன். ஆங்கு அழகிய புதியபிரும்மசாரி ஒருவர் நடமாடுவதைக் கண்டு மஹர்ஷிகள் ஆஶ்சர்யப்பட்டு நீயார்? என வினவினுர்கள். அதற்குள் அநலாசுரன் ஆங்கு வர அனைவரும் குழந்தாய்! விரைந்து எங்களுடன் ஓடிவா,

இல்லையேல் உன்னைத் தஹித்துவிடுவானவன் என்றனர். அவர் அசையாது நின்றார். அருகிலுள்ள பச்சைமரங்களை எல்லாம் எரித்துக்கொண்டு இவரருகே வந்தான் அசுரன். அரக்க உருவை விட்டு அக்நிஜ்வாலையாகவே அவரை எரிக்கவந்தான். அகஸ்த்யர் கடலை அருந்தியது போல் அநலாசுரனை விழுங்கிவிட்டார் விநாயகர்.

அவர் உடலினுள் ஸகலலோகங்களும் இருக்கின்றன. ஆதலாலந்த உஷ்ணம் எல்லோரையும்தஹித்தது. தங்கள் விநாயகர் உடலில் மாந்தியை உண்டுபண்ணினால்தான் உடல் சாந்தமாகும் எனக்கருதினர். அமிருதகிரணமுள்ள சந்திரனை விநாயகர் நெற்றியில் அமைத்தனர். குளுமை உண்டாகவில்லை. பிரும்மா தனது பெண்களான ஸித்தி புத்திகளைக் கன்னியாதாநம் செய்து கணேமனை அணைந் திருக்கக் கூறினார். உலகதாபம் அடங்கவில்லை. தாமரைத் தண்டு, புஷ்பம், ஜலம், ஆதிமேஷன் முதலியவைகளைக் கொண்டும் விநாயகரிடமுள்ள உஷ்ணத்தை அகற்ற முயற்சித்தனர். ஒன்றிலும் சாந்தமாகவில்லை. வேதம் அறிந்த எண்பத்தாராயிரம் முநிவர்கள் வந்து ஒவ்வொரு வரும் இருபத்தோரு அருகம் புல்லினால் விநாயகரை அர்ச்சித்தனர். அதனால் அவர் உடலும் உலகத்தவர் உடலும் குளிர்ந்து மாந்தமானது. அதனால் ஸந்தோஷ மடைந்த பகவான் பலயாகங்களால் என்னை ஆராதிப் பதைவிட ஒரு தூர்வையால் ஆராதித்தால் போதும். என் அருளுக்கு பாத்ரமாவீர் என்றார். ஆம்ரயா இதைக் கேட்டு ஆநந்தம் அடைந்தாள்.

எப்பொருளும் தூர்வைக்கீடில்லை. கௌண்டின்யர் மனைவிக்கு மேலும் கூறினார். நாரதர் கணேசனை வணங்கி ஸ்வாமின்! தங்களது அருளால் அக்ஷயமான செல்வத்தைப் பெற்ற ஜநகராஜனது ஸபைக்குச் சென்றேன். அவன் கர்மாவில் ஈடுபட்டவன், ஞ்ஞாநி. உனது பக்தியினால் கணேமர் உமக்கு நினைத்த பொருளைத் தருகிறார் என்றேன். கர்வத்தினால் அவர், தானே மூவுலகிலும் கர்மா செய்யும் உயர்ந்த கர்த்தா. கர்மபலனைப் பெற்ற போக்தா என்றார். தங்கள் பக்தியை மதிக்கவில்லை. அவர் கர்வத்தை அடக்கவேண்டும் என்று கூறி வைகுண்டம் சென்றார்.

விநாயகர் அழுகிச் சொட்டும் குஷ்டரோகமுள்ள ஒரு கிழபிராம்மணராகி ஜனகரிடம் சென்ருர். மஹா ராஜ! எனது பசிதீரும் அளவு அன்னமளிப்பாயா? என்ருர். அப்படியே ஆகட்டுமென அபரிமிதமான அன்ன ராசியை அளித்தார். மலைபோன்ற அன்னக்குவியலைப் புஜித்தும் பசி அடங்கவில்லை என்ருர் கிழவர். தன் நாட்டிலுள்ள ஸகல தான்யங்களையும் அளித்தார். அப்பொழுதும் அவர் போதுமெனக் கூறவில்லை. அரசன் பகவானே தன்னைப் பரீக்ஷிக்கிருர் என்றெண்ணி தலை குனிந்து நின்ருன். கணேசர் ஜநகனை நோக்கி மிக கீர்த்திவாய்ந்தவன்! நீ கர்த்தா! தாதா! என உன்னிடம் வந்தேன். என்பசிக்கு உணவளிக்க உனக்கு சக்தி இல்லை. நான் வீடு வீடாகச்செல்கிறேன் என்று கூறி நகரிலுள்ள எல்லோர் வீட்டிற்கும் சென்று ஆங்குள்ள உணவுகளையும் உண்டார். பசிமாத்ரம் ஆரவில்லை.

இவர் யார்? ராக்ஷஸஞ? பகவாஞ? என்று எல்லோ ரும் வியந்து பேசினர். விரோசஞ த்ரிசிரஸ் என்ற தம்பதிகளின் வீட்டிற்குச் சென்ருர். அவர்கள் விசேஷ விக்நேச பக்தர்கள். பரம ஏழை. தங்க குடிசையில்லாதவர். உண்ண உணவில்லாதவர். அங்கே சென்று பிக்ஷையளி என்ருர். விரோசஞ அவருக்கு அர்க்யபாத்ரம் அளித்து விநாயகருக்குப் பூஜை செய்த ஒரு அருகம் புல்லே இருக் கின்றது. அதைத்தான் அதிதிக்குத் தருகிறேமென்று அளித்தாள். அதிலிருந்து அருசுவையுடன் அன்னம் பக்ஷயம் முதலியனத்தோன்றி விநாயகர் பசியை அகற் றிற்று. ஆநந்த மடைந்தார். தனது நிஜஸ்வரூபத்தைக் காட்டி அந்த தம்பதிக்கு முக்தியளித்தார். இதைக்கண்ட ஜநகனும் மற்றவரும் கர்வமகன்று தூர்வையின் பெரு மையைக் கொண்டாடினர். அன்று முதல் ஆங்கு அனை வரும் அருகம் புல்லால் கணபதியை ஆராதித்தனர்.

**தூர்வை இந்ராதிபதவிகளைவிட மிகச் சிறந்தது:** கௌண்டின்யர் ஆச்ரையிடம் ஒரு தூர்வையை அளித்து இதை இந்த்ரனிடமளித்து இதற்கு ஸமஇடை ஸ்வர்ணம் கேட்டு வாங்கிவா என்ருர். அவரது தவவலிமையால் ஆச்ரயை சக்ர லோகம் சென்ருள். முநிபத்னியை வர வேற்று பூஜித்து என்ன வேண்டுமென்ருன்? அவள்

முனிவர் சொல்லைக்கூற இந்த்ரன் யோசித்தான். இது மஹிமை நிறைந்தது. இதற்கீடு நம்மிடமில்லை. குபேர னிடம் அனுப்பலாம் என தூதனுடன் முநிபத்னியை அவ னிடம் அனுப்பினான். குபேரன் விஷயமறியாமல் இதைக் கேட்டு நகைத்தான். வேண்டியபொருள் தருகிறேன். இதற்கீடு மிகச் சொல்பமல்லவா? என்றான். பதிசொற் படி இதை ஒரு தராசில் வைத்து நிறுத்து அதற்கு அதிக மும் குறைவுமில்லாமல் ஸமஎடை ஸ்வர்ணமளித்தால் போதும் என்றாள் முநிபத்நீ.

பத்தரிடமுள்ள சிறிய தராசில் அருகை வைத்து மற்றோர் தட்டில் ஸ்வர்ணத்தை வைத்து நிறுத்தான் குபேரன். அருகிருந்த தட்டு அசையவேயில்லை. பெரிய தராசைக் கொண்டு நிறைய ஸ்வர்ணத்தால் நிறுத்தான். அப்பொழுதும் அருகுதட்டு மேலே எழுந்திருக்கவில்லை. நவநிதிகளையும் வைத்து நிறுத்தான். பயனில்லை. இதனை அறிந்த சக்ரன் தன்னையேவைத்து நிறுக்கக்கருதி மும்மூர்த் திகளைத் த்யாநம்செய்தான். அவர்கள் ப்ரத்யக்ஷமாயினர். முதலில் சக்ரன் துலையில் ஏறினான். பிறகு குபேரன் முதலிய திக்பாலர் ஏறினர். ஸமஸ்ததேவர்களும் ஏறினர். முடிவில் மும்மூர்த்திகளும் ஏறினர். அருகிருந்த தட்டு எழவேயில்லை. அனைவரும் ஆய்சர்யப்பட்டு ஆய்ரயை யுடன் கௌண்டின்ய முநிவரிடம் வந்து எதனால் இது அவ் வளவு பாரமுள்ளதென வினவினர். விநாயகரது ஶிரஸில் ஸமர்பித்ததால்இயற்கையிலும்தூர்வை அவ்வளவு மகிமை உள்ளது எனக் கூறினார் முநிவர். எல்லோரும் ஆய்சர்ய மடைந்து பதினான்கு உலகிலும் தூர்வைக்கு ஈடு ஒன்று மில்லை என உணர்ந்து உத்தரவு பெற்றுச் சென்றனர். ஆய்ரயை அன்று முதல் நித்யம் விநாயக பூஜைக்கு அருகு கொண்டுக்கொடுத்தாள். முடிவில் இருவரும் முக்தி யடைந்தனர். தூர்வையை அவமதிப்பவர் நீசனாகப் பிறப்பர்.

## ஸங்கஷ்டஹர சதுர்த்தீ விரத பூஜா.

க்ருதவீர்யனது தந்தை பிரும்மாவிடமிருந்து தன் புத்ரனுக்கு ஸந்தானம் உண்டாவதற்காக ஸங்கஷ்டஹரண சதுர்த்தி விரதத்தை உபதேசமாகப் பெற்றார். அதை

ஒரு புத்தகமாக அமைத்து கிருதவீர்யனது ஸ்வப்நத்தில் தோன்றி இந்த நூலில் உள்ளபடி விரதத்தைச் செய். ஸத்புத்ரன் பிறப்பான் என்றார். விழித்தெழுந்த அரசன் ஆஶ்சர்யமடைந்து கையிலுள்ள புஸ்தகத்தைத் தன்குல குருவான அத்ரியிடம் அளித்து அந்த விரதத்தை அதில் உள்ளபடி அநுஷ்டித்தார்.

மாககிருஷ்ண சதுர்த்தி செவ்வாய்க்கிழமையுடன் சேர்ந்தபோது இந்த விரதத்தை ஆரம்பித்து ஓராண்டு அநுஷ்டித்துப் பின்னர் உத்யாபநம் செய்ய வேண்டும். ஸ்நாநம் செய்து சுத்தனாக ஸங்கல்பம் செய்து கொள்ள வேண்டும். கலஶ பூஜை செய்து பூஜை ஆரம்பிக்க வேண்டும். கலஶத்தின்மீது விக்நேஶ யந்த்ர ப்ரதிஷ்டை செய்து கணேச பிம்பத்தை ஸ்வர்ணமல்லது வெள்ளியினால் அமைத்துப்பூஜிக்க வேண்டும். வேதமறிந்தோர் புருஷ ஸூக்தவிதிப்படி பூஜிக்கலாம்.

## பூஜா விதி.

1 ஆகுபிருஷ்ட ஸமாரூட சாமரைர் வீஜிதம் கணை: |
ஶேஷயக்ஞோப வீதம்ச சிந்தயேத்தம் || -(கஜாநநம் த்யாயாமி)

2 ஆகச்சதேவ தேவேஶ-ஸங்கடான் மாம் நிவாரய |
யாவத் வ்ரதம் ஸமாப்யேத-தாவத்வம் ஸந்நிதௌ ||
பவ ஆவாஹயாமி — (ஸஹஸ்ர ஶீர்ஷா.........)

3 கணேச நமஸ்தேஸ்து-ஸர்வஸித்திப்ரதாயக |
ஆஸநம் க்ருஹ்யதாம் தேவ-ஸங்கடாந் மாம்நிவாரய ||
ஆஸநம் ஸமர்ப்பயாமி — (புருஷ ஏவேதம்.........)

4 உமா புத்ர நமஸ்தேஸ்து-நமஸ்தே மோதக ப்ரிய |
பாத்யம் க்ரஹாண தேவேஶ-ஸங்கடம் மேநிவாரய ||
பாத்யம் ஸமர்ப்பயாமி — (ஏதாவாநஸ்ய.........)

5 லம்போதர நமஸ்தேஸ்து-ரத்நயுக்தம்பலான் விதம் |
அர்க்யம் க்ருஹாண தேவேஶ-ஸங்கடம் மேநிவாரய ||
அர்க்யம் ஸமர்ப்பயாமி — (த்ரிபாதூர்த்வ.........)

6 கங்காதி ஸர்வதீர்த்தேப்ய:-ஆஹ்ருதம் தோயமுத்தமம் |
க்ருஹாணாசமநீ யார்த்தம்-ஸங்கடம் மேநிவாரய ||
ஆசமநீயம் ஸமர்ப்பயாமி — (தஸ்மாத்விராட.........)

ஓம்: தத்: ஸத்:

சித்த மருந்துகளில்



நிறைந்த சாதனைகள் !

# நல்வாழ்வுப் பணி

## " சித்த மருத்துவத்தின் சிறப்பு "

சித்தர்களின்

அளவிலாப் பெருமைக்கு சிறந்த அத்தாக்ஷி

K. T. கிருஷ்ணமூர்த்தி ஆச்சாரியின்

## "மேல்மாயில் மருந்து"

தீராத நாட்பட்ட சரும ரோகங்களுக்கு சிறந்த நிவாரணி.

.............. முழு விவரங்கட்கு எழுதுங்கள் ..............

சித்தர் டாக்டர்

K. T. கிருஷ்ணமூர்த்தி ஆச்சாரி & சன்ஸ்,

5/22 மேல்மாயில் P. O., N. A. Dt.

